

# “ஆளுநர் மத்திய அரசின் ஏஜெண்ட் அல்ல!”

## —பர்னாலா பேட்டி

தமிழகத்தின் புதிய ஆளுனராகப் பொறுப்பேற்றிருக்கும் சுர்ஜித்சிங் பர்னாலாவுக்கு வயது அறுபத்தைந்து. விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவர். இளம் வயதிலேயே தந்தையை இழந்து விட்டதால், குடும்பப் பொறுப்பு இவர் மீது சுமந்தது. வேலைக்குப் போக வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. ஆனாலும், படிப்பை விட்டுவிட மனமில்லை. மாலை நேரக் கல்லூரியில் சேர்ந்து பட்டம் பெற்றார். சட்டப்படிப்பை முடித்துவிட்டு, வக்கீலாகத் தொழில் ஆரம்பித்தவர். 1951 — ஆம் ஆண்டு, பப்ளிக் பிராசிக்யூட்டர் ஆனார். இரண்டே வருஷத்தில், அதை ராஜினாமா செய்துவிட்டுச் சொந்தமாய் பிராக்டிஸ் செய்ய ஆரம்பித்தார்.

சமூக சேவையில் ஆர்வம் மிகுந்திருந்ததால் சமுதாயப் பணி செய்து கொண்டே, வழக்குரைஞர் தொழிலிலும் ஈடுபட்டிருந்தார். 1967 — ஆம் ஆண்டு, சட்டமன்றத் தேர்தலில் போட்டியிட்டு வெற்றி பெற்றார். இரண்டாண்டுகளில் பஞ்சாபின் கல்வி

மந்திரியானார். எழுபத்து ஏழில் பாராளுமன்றத்துக்குப் போட்டியிட்டு வெற்றி பெற்றதோடு ஜனதா அமைச்சரவையில் விவசாய அமைச்சராகவும் விளங்கினார். ஜனதா அரசு பதவி இழந்த பின்னர் இவரது முழுக் கவனமும் பஞ்சாப் அரசியலில் திரும்பியது. அகாலிதளக் கட்சியின் தூண்களில் ஒருவராய் இருந்தார். பொற்கோயிலில் ராணுவம் புகுந்தது போன்ற சம்பவங்கள் மதரீதியில் இவர் மனத்தைப் புண்படுத்தினாலும் மிதவாதப் போக்கையே உறுதியாகப் பின்பற்றினார் பர்னாலா.

எமர்ஜென்சியின் போதும் வேறு பல காலகட்டங்களிலுமாக இவர் நாலரை ஆண்டு காலம் அரசியல் காரணங்களுக்காகச் சிறைத் தண்டனை அனுபவித்தவர்.

1985 பஞ்சாப் தேர்தலில் அகாலிதள லோங்கோவால் பிரிவு வெற்றி பெற்றதும், பஞ்சாப் முதல்வரானார். ராஜீவ் அரசு இவரை டிஸ்மிஸ் செய்தது.

பர்னாலாவின் மனைவி பெயர் சுர்ஜித் கௌர். இவரும் சட்டமன்ற உறுப்பினராய் இருந்திருக்கிறார். இவர்களுக்கு ஒரு பெண்; மூன்று மகன்கள்.

**க**வர்னருடன் ராஜ்பவனில் ஒரு மினி பேட்டி:

கேள்வி: கவர்னர் பதவி என்பதே தேவையற்றது என ஒரு கருத்து நிலவுகிறதே! இதைப் பற்றி உங்கள் கருத்து என்ன?

ஆளுனர்: அதிகாரங்கள் மத்திய அரசிடம் குவிந்திருக்கக் கூடாது; மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் தரப்பட வேண்டும் என்பதுதான் நான் சார்ந்திருந்த அகாலி தளத்தின் கொள்கையும்கூட. எனினும் கவர்னர் பதவி அவசியமில்லாதது என நான் கருதவில்லை. ஆனால் மத்திய அரசின் ஏஜெண்டாகக் கவர்னர் செயல்படுவதில் எனக்கு உடன்பாடு இல்லை. கவர்னருடைய அதிகாரங்கள் வரையறுக்கப்பட வேண்டும் என்று நான் நினைக்கிறேன்.

கேள்வி: நீங்கள் பஞ்சாப் பிரச்னையை முழுமையாய் அறிந்தவர். பிரச்னையைத் தீர்க்க அரசு என்ன செய்ய வேண்டும்?

கவர்னர்: அங்கே ரணங்கள் ஆற்றப்பட வேண்டும். சீக்கியர்களுடைய நியாயமான கோரிக்கைகளை — நதி நீர்ப் பங்கீடு, சண்டிகர் பிரச்னை போன்றவை — நிறைவேற்ற நடவடிக்கை எடுக்க வேண்டும். 'புல்லட்டுக்கு புல்லட்' என்ற அடிப்படையில் தீர்வு காணவே முடியாது.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி.**

படம்: **யோகா.**

---



மானேஜர்: ஆபீஸ்ல இருக்கிறதே மொத்தம் பத்துப் பேர்; இதுல அஞ்சு பேர் லீவுன்னா என்னய்யா ஆகும்?

ஊழியர்: குறட்டைச் சத்தம் பாதியாக் குறையும் சார்!

— சமுதி எஸ். சேதுராமன்.



''மந்திரி பதவி, எனக்குத் தோளில் உள்ள துண்டு மாதிரின்னு தலைவர் அடிக்கடி சொல்றாரே, ஏன்?''

''துண்டு இல்லாமல் அவரால இருக்க முடியாதே... அதனாலதான்!''

— வி. ரேவதி.

''மந்திரி சார்! பதவி எந்த நிமிஷத்துலேயும் பறிபோயிடலாம்னு நீங்க கவலைப்படறது நியாயம்தான், அதுக்காக உங்க வீட்ல சர்ச்சிப்போட்டு வைக்கிறது கொஞ்சம் கூட நல்லா இல்லை!''

— எஸ். பரமகுரு



# உலகக் கோப்பைக் கால்பந்து — ஒரு மாதத் திருவிழா!



* உலகக் கோப்பை

● இருபத்துநாலு டீம்கள் இந்தப் போட்டியில் மோதுகின்றன.

● உலகக் கோப்பை நாலு கிலோ எடை. இருபது அங்குல உயரம். பதினெட்டு காரட் தங்கத்தால் செய்யப்பட்டது.

● 62 ஆண்டுகளாக நடைபெறுகிறது உலகக் கோப்பைக் கால் பந்தாட்டம். ஜுலே ரிம்மெட் என்கிற பிரஞ்சுக்காரர்தான் இந்த யோசனையைத் தெரிவித்தார்; அதனால் அவர் பெயராலேயே இந்தக் கோப்பை வழங்கப்பட்டது — 1974 வரை. பிறகு இந்தக் கோப்பை திருடுபோய்விட்டது. ஸ்டைஃபிள்ஸ் என்ற போலீஸ்-மோப்ப நாய்தான் இதைக் கண்டுபிடிக்க உதவியது.

● கால்பந்தாட்ட ரசிகர்கள், வியால்லி (இதாலி), கல்லிட் (நெதர்லாந்து), மரடோனா (அர்ஜன்டீனா) ஆகிய நட்சத்திர ஆட்டக்காரர்களின் ஆட்டத்தைக் காணத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

● பல கால்பந்தாட்ட வீரர்களின் வெற்றிக் கதைகள், நம்ப முடியாதவை. புகழ்பெற்ற பீலி, குப்பைக் காகிதங்கள் பொறுக்கிக் கொண்டிருந்தவர். ஸ்டான்லி மாத்யூஸ், சுரங்கத் தொழிலாளி ஒருவரின் பதினைந்து குழந்தைகளில் ஒருவர். மரடோனா, ஸீகோ, சாகரடீஸ், பாவ்லோ ரோஸ்ஸி எல்லோருமே மிக வறுமையான குடும்பச் சூழலிலிருந்து வந்தவர்கள்தாம்.

● 'போதை மருந்துகள் உபயோகித்தால், கடுமையான சோதனை செய்து கண்டுபிடிப்போம். ஜாக்கிரதை!' என்று அமைப்பாளர்கள் எச்சரிக்கை விடுத்திருக்கிறார்கள்.

● நாற்பது வருடங்களுக்குப் பிறகு அமெரிக்கா இந்த ஆட்டத்தில் போட்டியிடுகிறது.

● ஐக்கிய அரபு நாடுகள்தான், இதில் பங்கு கொள்ளும் மிகச் சிறிய நாடு. அதுவே தன் வீரர்களுக்கு ஊக்கம் அளிக்க, டீம் வெற்றி பெற்றால் 25000 ரூபாய் பரிசு கொடுப்பதாக அறிவித்திருக்கிறது. (ஆனால் அதற்கெல்லாம் சான்ஸே இல்லையாம்!)

● பிரிட்டிஷ் விளையாட்டுத்துறை அமைச்சர் மொய்னிஹான் இதாலிக்குப் போகிறார் — தமது ரசிகர்கள் ரகளை செய்யாமல் பார்த்துக் கொள்ள! டச்சுக்கார ரசிகர்களும் இதே ரகம்தான். ரசிகர்களா, ரவுடிகளா என்று பிரித்துச் சொல்ல முடியாதபடி இவர்கள் நடந்து கொள்ளுவார்கள்.

● மோசமான நடத்தைக்காக மைதானத்திலிருந்து ஆட்டக்காரரை வெளியேற்றத் தவறினால், நடுவரையே சிவப்பு கார்டு கொடுத்து வெளியேற்றி விடுவார்கள்! இது புதிய விதிகளில் ஒன்று.

● வங்கிகள் மூலமாக, ஜூன் இரண்டாம் தேதியன்றுதான் டிக்கட்டுகள் விற்பனை ஆகத் தொடங்கியிருக்கின்றன. அப்படியும் அதற்கு முன்பே பத்தாயிரம் போலி டிக்கட்டுகளை அச்சடித்து, ஜூலை 8 ஆம் தேதி ஆடப்படவிருக்கும் கடைசி நாள் ஆட்டத்துக்கு, விற்றுத் தள்ளிவிட்டார்களாம்! இத்தனைக்கும் ஒரிஜனல் டிக்கட்டின் டிசைன் என்ன, வர்ணம் என்ன என்றே தெரியாத போது.

● உலகக் கோப்பையை வெல்லப் போவது யார்? அர்ஜன்டீனாவா, நெதர்லாந்தா, இங்கிலாந்தா, இதாலியா? இந்த சஸ்பென்ஸைக் கோடிக் கணக்கான மக்கள் நேரிலும், டீவியிலும் பார்க்கத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

● இறுதிப்போட்டி நடைபெறும் ரோம் நகர மைதானத்தை, போப் ஆண்டவர் ஆசீர்வதித்திருக்கிறார். 'இந்தக் கோலாகலம் உலக அமைதி, வறுமை ஆகிய பிரச்னைகளை மறக்கடித்துவிடக் கூடாது. நியாயமான விளையாட்டு ஆட வேண்டும். புத்துணர்ச்சி பெறவேண்டும். நட்புணர்வு பெருக வேண்டும்!' என்று கூறியிருக்கிறார்.

தொகுப்பு : சித்தார்த்



* கல்லிட் * மரடோனா

# தொழிலாளருக்கு நிர்வாகத்தில் பங்கு உண்டா? சட்டத்தால் சாத்தியமா?



நிர்வாகத்தில் தொழிலாளர்களைப் பங்கேற்கச் செய்ய வேண்டும் என்பது ஒன்றும் புதிதாக உருவான கருத்து அல்ல. நாற்பதாண்டுகளுக்கு மேலாக, இந்தக் கவர்ச்சிகரமான கருத்தை ஒவ்வொரு கட்சியும், ஒவ்வொரு தேர்தல் அறிக்கையிலும் சொல்லி வந்திருக்கிறது.

ஜனதா தள தேர்தல் அறிக்கையில் இந்தக் கருத்து முக்கியமானதாகக் குறிப்பிடப் பட்டிருந்தது. ஏப்ரல் மாதம் தில்லியில் நடந்த இந்தியத் தொழிலாளர் நலக் கருத்தரங்கின் 29 ஆவது கூட்டத்தில், நிர்வாகத்தில் தொழிலாளர் பங்கேற்பது குறித்து விரிவாகவே விவாதிக்கப்பட்டது. 1970ல், தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் ஊழியர் சார்பில் நிர்வாக போர்டில் ஒருவர் அங்கம் வகிக்க வழி செய்யப்பட்டது. 1975ல், தபால் — தந்தி, ரயில்வே, மின்சார வாரியங்கள், சுரங்கத் தொழில் இவற்றில் இத் திட்டம் அறிமுகப்படுத்தப்பட்டது. ஆனால் இவை எல்லாமே நிர்வாகப் பிரச்னைகளாலும்; யார் தொழிலாளர் பிரதிநிதியாக போர்டில் அங்கம் வகிப்பது என்ற சிக்கலாலும்; எத்தனை தூரத்துக்கு நிர்வாகம் சம்பந்தமான தகவல்களைப் பகிர்ந்து கொள்ளுவது என்ற குழப்பங்களாலும், செயல்பாட்டுக்கு ஒத்து வராது போய் ஏட்டளவிலேயே இருந்து விட்டன.

நிர்வாகத்தில் பங்கு ஏற்றுக் கொண்டு விட்டால் பிறகு, பேச்சு வார்த்தைகள் மூலம் தங்கள் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்ளும் பலம் குறைந்து விடுமே என்று தொழிலாளர்களிடம் ஒரு பயம் இருக்கிறது. இந்தப் பயத்தை எப்படிப் போக்குவது? உற்பத்தி அதிகரிப்புக்கு, நிர்வாகத்தில் தொழிலாளர் பங்கேற்பது உதவியாக இருக்குமா என்பதும் நிர்வாகத்தினரின் சந்தேகம்.



* க. சுப்பு

நிர்வாகத்தில் தொழிலாளர் பங்கேற்பு என்கிற திட்டத்தை, அப்படியே வார்த்தைக்கு வார்த்தை அர்த்தம் எடுத்துக் கொண்டு விழிக்கத் தேவையில்லை என்பது சிலர் கருத்து. குறிப்பிட்ட இலக்கை அடைய உற்பத்தியை அதிகரிக்கவும், சுத்தமான சுற்றுச் சூழலைக் காணவும் உற்பத்திக் கூடத்தில் நவீன மாற்றங்களுக்கு வகை செய்யவும் இரு சாராருமே ஒத்துழைத்தால் போதும் என்று இவர்கள் யதார்த்தமாகச் சொல்கிறார்கள். சிந்திக்கும் திறன் படைத்த தொழிலாளர்களின் யோசனைகளை நிர்வாகம் வரவேற்று ஏற்க வேண்டும் என்கிறார்கள்.

தொழிலாளர் சார்பில் அங்கத்தினர் ஒருவர் போர்டில் இருப்பதைச் சாதகமாக்கிக் கொண்டு, நிர்வாகம் தங்கள் நியாயமான பொறுப்புக்களைச் செய்யாது தவிர்க்கும் நிலைமை உருவாகி விடக்கூடாது. அதே போல, நிர்வாகம் தம்மிடம் பகிர்ந்து கொள்ளும் தகவல்களை, நிர்வாகத்துக்கு எதிராகப் பயன்படுத்திக் கொள்ள தொழிலாளர்களும், தொழிற் சங்கங்களும் எண்ணக்

கூடாது. இவை எந்த அளவுக்கு நேர்மையுடன் கடைப்பிடிக்கப்படும்? இந்தத் திட்டம் நடைமுறையில் சாத்தியம்தானா? என்றெல்லாம் அரசியல், தொழில் வட்டாரங்களில் இப்போது பேசப்படுகிறது.



**அ**னுபவம் வாய்ந்த தொழிற்சங்கவாதியும், தமது கருத்துக்களை ஒளிவு மறைவில்லாமல் . வெளிப்படுத்துபவருமான க. சுப்புவை 'சத்தியமூர்த்தி பவனி'ல் சந்தித்து இது பற்றிய அவரது கருத்துக்களைக் கேட்டோம்:

''உண்மையில், நிர்வாகமோ, தொழிலாளரோ வைத்த கோரிக்கை அல்ல இது. முற்போக்கான நடவடிக்கை என்று அரசாங்கம்தான் இதை அறிமுகப்படுத்துகிறது. 1976ல், 42 ஆவது அரசியல் சாசனச் சட்டத் திருத்தம் மூலமாக, நிர்வாகத்தில் தொழிலாளர் பங்கேற்க அரசு வகை செய்ய வேண்டும் என்று அறிவிக்கப்பட்டது. ஆனால் எந்த அளவுக்குச் செயல்படுத்த முடிந்தது?

''தொழிற்சாலைகள் இருக்கின்றன. அவற்றில் எல்லாமே தொழிற் சங்கங்கள் இருக்கின்றனவா? இல்லை. இருக்க வேண்டும் என்ற அவசியமும் இல்லை! அப்படியே ஒன்றோ, ஒன்றுக்கு மேற்பட்டோ தொழிற் சங்கங்கள் இருந்தாலும் அவற்றுக்கு நிர்வாகம் அங்கீகாரம் கொடுப்பது எப்படி? இதிலும் பல்வேறு நடைமுறைகள் கையாளப்படுகின்றன. மகாராஷ்டிரா, மத்தியப் பிரதேசம் மாநிலங்களில் தனி சட்டங்களே இருக்கின்றன. தொழிற் சங்கங்களை





# "சட்டத்தின் நோக்கம் நிறைவேறுமா?"

**— தொழிலாளர் நல அமைச்சர் நேரு கேட்கிறார்.**

"தொழில்கள் வளர வேண்டும். அதே சமயத்தில் தொழிலாளர் வாழ்வும் வளம் பெற வேண்டும். அதாவது தொழில்கள் வளரும்போது பெருகும் இலாபத்தில் தொழிலாளர்களுக்கும் பங்கு கிடைக்க வேண்டும். நாம் போடும் சட்டங்களும் திட்டங்களும் இவற்றைச் செயல்படுத்துவதாக இல்லையென்றால் ஒரு பயனும் இல்லை. இந்திய அரசுக்குச் சொந்தமான பல பொதுத்துறை நிறுவனங்களில், தொழிலாளர்கள் நிர்வாகத்தில் பங்கு பெற்றிருந்தும் கூட அதனால் யாருக்குமே பயனில்லை என்பது வருந்தத் தக்க விஷயம்.

"மேலும் நில உச்சவரம்புச் சட்டம், வரதட்சணை ஒழிப்புச் சட்டம், குழந்தைத் தொழிலாளர் சட்டம் போன்ற சட்டங்களெல்லாம் எந்த அளவுக்குச் செயல்படுத்தப்படுகின்றன? நடைமுறையில் இவையெல்லாம் மதிக்கப்படுவதேயில்லை. இவற்றையெல்லாம் கருத்தில் கொண்டே தொழிலாளர்களை நிர்வாகத்தில் பங்கேற்கச் செய்யும் சட்டத்தைக் கொண்டு வர வேண்டும். சட்டம் வெறும் ஏட்டளவில் மட்டுமே இருந்துவிடாமல் சட்டத்தின் நோக்கம் சரியான முறையில் நிறைவேற்றப்படுகிறதா என்பதையும் மத்திய அரசு கவனிக்க வேண்டும்."

**சந்திப்பு : ப்ரியன்**

அங்கீகரிப்பது நிர்வாகத்தின் சுய விருப்பத்தைப் பொறுத்தது. இன்னும் நாம் இந்த வழிமுறைகளையே ஒழுங்குபடுத்தவில்லை!

"நம் நாட்டுத் தொழிற்சாலை ஊழியர்களில், விவரம் அறிந்தவர்கள் மிகக் குறைச்சல். தங்கள் கடமைகள் என்ன, உரிமைகள் என்ன, தாம் சம்பந்தப்பட்ட சட்ட திட்டங்கள் என்ன என்றே பெரும்பாலோருக்குத் தெரியாது. தான் பணிபுரியும் தொழில் பற்றி ஒருவனுடைய அறிவு என்ன? அவன் எந்தப் பிரிவில் வேலை செய்கிறானோ அது பற்றி மட்டும்தான் அவனுக்குத் தெரியும். தொழிலைப் பற்றி முழுமையாகத் தெரிய வாய்ப்புக் கிடையாது. உற்பத்தி செய்யப்பட்ட பொருள் பற்றியோ, தொழில் நுணுக்கம் பற்றியோ, மார்க்கெட் நிலவரம் பற்றியோ அவனுக்கு முழுதும் தெரியுமா? நிர்வாகங்களே, தொழில் துறை அனுபவமுள்ள புரஃபஷனல் மானேஜர்களைத்தானே நியமிக்கின்றன?

"இந்தப் பின்னணியில் தொழிற்சாலை ஊழியர்கள் என்ன செய்ய முடியும்? அதிலும் பல தொழிற் சங்கங்களில் வெளியார்தான் இப்போதும் தலைமை ஏற்று நடத்துகிறார்கள். தொழிற்சாலையில் பணிபுரிகிறவரே ஏற்று நடத்தும் நிலைமை உருவாகவில்லை. தொழிற் சங்கத்தையே ஏற்று நடத்த முடியாத தொழிலாளி, தொழிற்சாலையை எப்படி நடத்த முடியும்?

"பாலன்ஸ் ஷீட் பார்த்து, டிமாண்ட் வைக்கத் தெரியாத சங்கங்கள் இன்றும் எத்தனையோ இருக்கின்றன. ஆக, உத்தேசிக்கப்பட்டுள்ள சீர்திருத்தம் நிர்வாகத்தில்தான் தொழிலாளியைப் பங்கு கொள்ளச் செய்கிறது; உடைமையில் அல்ல. இது மக்களைக் கவர அறிவிக்கப்படும் 'பாப்புலிஸ்ட்' நடவடிக்கை மட்டுமே. நிர்வாகத்தில் தொழிலாளருக்குப் பங்கு என்பது லட்சியமாக இருக்கலாம். வெற்றிகரமாகச் செயல்படுத்த முடியுமா என்பதே என் கேள்வி!

"இப்போதும் கூட 'பணிக் குழு' எனப்படும் ஒர்க்ஸ் கமிட்டி பல பொதுத் துறை நிறுவனங்களில் இயங்கி வருகிறது. இந்தப் புதுச் சட்டம் இதுபோன்ற சலுகையை எல்லாம் தள்ளி விடும்! 25 சதவிகித பங்கேற்பு என்ற அடிப்படையில், 13 சதவிகிதம் தொழிற்சாலைத் தொழிலாளரும், 12 சதவிகிதம் (கிளார்க் போன்ற) அலுவலக ஊழியரும் பங்கு கொள்ளப் புதிய சட்டம் வகை செய்கிறது. இதை நிர்வாகம் விரும்பவில்லை; நிர்வாகத்தின் சில பகுதிகளைப் பற்றித் தொழிலாளர் அறிந்து கொள்ளுவதை நிர்வாகம் விரும்புவதில்லை.

"ஏற்கெனவே பொதுத்துறை நிறுவனங்கள் பல ஏராளமான நஷ்டத்தில் இயங்கி வருகின்றன. ஏனென்றால் தனியார் துறையில் உழைப்பது மாதிரி, பொதுத் துறையில் உழைப்பதில்லை. அந்தக் கலாசாரம் வேறு; இந்தக் கலாசாரம் வேறு. இப்போதே நாம் பல பிரச்னைகளை எதிர்நோக்கி வருகிறோம். இதில் இன்னும் புதிய சிக்கல்களை உருவாக்கக் கூடாது!

"தேசியமயமாக்கப்பட்ட வங்கிகளில் எல்லாம் ஊழியர் சார்பில் தேர்ந்தெடுக்கப்பட்ட டைரக்டர் ஒருவரை நியமிக்கிறார்கள். ஆனால், நடைமுறையில் நிலைமை மோசமாகவே இருக்கிறது. அவர் பிளேனில் வந்து போய், ஐந்து நட்சத்திர ஓட்டலில் தங்கி, நிர்வாக இயக்குநர்களுடன் கூட்டத்தில் பங்கெடுத்துக் கொண்டு பறந்து விடுகிறார்! அவரும் நிர்வாகத்தில் ஒருவர் மாதிரி, ஊழியர்களுக்கும் அவருக்கும் சம்பந்தமே இல்லாத மாதிரி அல்லவா நடந்து கொள்ளுகிறார்?

"ரகசிய வாக்கெடுப்பு முறை மூலம்

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்



**ஏனெனில், காம்ப்ளான், குழந்தைகளுக்கு அன்றாடம் தேவைப்படும் அத்யாவசிய ஊட்டச்சத்தை வழங்குகிறது.**

குழந்தைகளின் வளர்ச்சிப் பருவம் சாதாரணமாக 15 அல்லது 16 வயதிலே நிறைவு பெறுகிறது. இந்த வளர்ச்சிக்கு அடிப்படையான ஊட்டச்சத்து புரதமாகும். ஆகவே, உங்கள் குழந்தைகளுக்கு இப்போது காம்ப்ளான் மிகமிக அவசியம். புரதச் சத்துக்களிலேயே தலைசிறந்த பால்-புரதம் (20%) கொண்டது காம்ப்ளான். மேலும் 22 ஆதார உணவுச்சத்துக்களும் காம்ப்ளானில் உள்ளன.

குழந்தைகள் ஆசையோடு கேட்டு அருந்தும் சுவைகளில் கிடைக்கிறது காம்ப்ளான்.




**23**
மூலாதார
சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்
பால் சேர்க்கத் தேவையில்லை

**காம்ப்ளான்®**

GX/62/203 TAM

## திட்டமிட்ட பரிபூரண உணவு



## மாதம் ஒரு தொகுதி

### திருச்சி — 2 தொகுதிக்கு வரப் போகிறோம்!

'மாதம் ஒரு தொகுதி' என்ற கல்கியின் திட்டத்தின் கீழ் நடந்த ஐந்தாவது குலுக்கலில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தொகுதி திருச்சி — 2 தொகுதி.

இத்தொகுதியில் போட்டியிட்ட முஸ்லிம் லீக் வேட்பாளரை விட 9,793 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி பெற்றிருப்பவர் தி. மு. க. வைச் சேர்ந்த அன்பில் பொய்யா மொழி.

அன்பில் பொய்யா மொழி தாம் கொடுத்த தேர்தல் வாக்குறுதிகளிலும் பொய்யா மொழியாகவே இருக்கிறாரா? திருச்சி — 2 தொகுதியைச் சேர்ந்த அனைவரும் தங்கள் எம். எல். ஏ. வான அன்பில் பொய்யா மொழியிடம் கேட்க விரும்பும் கேள்விகளை எங்களுக்கு எழுதியனுப்பலாம். அத்துடன் எம். எல். ஏ. செய்யும் சிறப்புப் பணிகள் ஏதேனும் இருந்தால் அவற்றையும் குறிப்பிட்டு எழுதலாம். தொகுதியின் வளர்ச்சிக்கான உங்கள் ஆலோசனைகளையும் எழுதலாம்; குறைகளையும் எழுதலாம்.

நீங்கள் எழுதும் ஒவ்வொரு விஷயத்தையும் எம்.எல்.ஏ. கவனத்திற்குக் கொண்டு வந்து, அவருடன் பேசி விவாதிப்போம்; நேரடியாக வந்து சுற்றிப் பார்த்து நிலமைகளை ஆராய்வோம்.

கடைசியாக எங்கள் அனுபவங்களையெல்லாம் ஆகஸ்டு மாதக் கல்கியில் கட்டுரையாக வெளியிடுவோம்.

**திருச்சி — 2 தொகுதியிலுள்ள கல்கி வாசகர்களின் கடிதங்கள் கல்கி அலுவலகத்திற்கு வந்துசேர வேண்டிய கடைசித் தேதி: 6.7.90.**

உறையின் மேல் 'மாதம் ஒரு தொகுதி' என்று குறிப்பிட்டு உடனடியாக எழுதியனுப்புங்கள்.

— ஆசிரியர்

ஊழியர் பிரதிநிதி தேர்ந்தெடுக்கப்படலாம்; அங்கீகரிக்கப்பட்ட தொழிற் சங்கம் வாயிலாகப் பரிந்துரை செய்யப்படுவது ஏன்? இந்த முறையில், தொழிற் சாலைகளில் அமைதியான சூழ்நிலை கெட வாய்ப்பு இருக்கிறது. பொதுத் துறை நிறுவனங்களில் நடைபெறும் தேர்தல்கள், கிட்டத்தட்ட பொதுத் தேர்தல் போலவே நடத்தப்படுகின்றன. பெரிய பெரிய அரசுத் தொழிற் சாலைகளில் ஏகப்பட்ட காண்ட்ராக்டர்கள். இவர்கள் கொட்டிக் கொடுக்கும் பணத்தைத் தேர்தலுக்குப் பயன்படுத்திக் கொண்டு வெற்றி பெற்ற பிறகு, நிர்வாகத்திலும் அவர் பங்கேற்கும் போது, காண்ட்ராக்டர்கள் சும்மாவா இருப்பார்கள்? தாங்கள் செலவழித்ததற்குப் பிரதிபலனை எதிர்பார்க்கத் தானே செய்வார்கள்? இப்போதே இங்கே ஏராளமாகத் திருட்டுப் போகிறது. திருட்டில் அதிகாரிகளுக்கும், தொழிற் சங்கத் தலைவர்களுக்கும் தொடர்பு இருக்கிறது. இந்தச் சூழ்நிலையில், தொழிலாளர் நிர்வாகத்தில் பங்கேற்றாலும் கூட, உற்பத்தி எப்படிப் பெருகும்? கவனம் முழுதும் தொழிற்சங்கத் தேர்தலிலும், அதற்குப் பிறகு ஏற்படுகிற நடவடிக்கைகளிலும்தானே இருக்கும்!

"நிர்வாகத்தில் ஊழியர் பங்கேற்கும் சிந்தனையே சோஷலிஸ நாடுகளைப் பார்த்துவிட்டு வந்த பிறகு உருவானதுதான். யூகோஸ்லாவியா, பல்கேரியா, கம்யூனிஸ்ட் சைனா போன்ற நாடுகளைப் பார்த்துவிட்டு வந்து உருவான சிந்தனைதான். நம் மண்ணுக்குத் தகுந்த மாதிரி சிந்தனை உருவாக வேண்டும். அது மட்டுமல்ல. அங்கே எல்லாம் இன்று நிலைமை தலைகீழாக மாறி விட்டது. அவர்கள் கை விட்டதைப் போய் நாம் பிடித்துக் கொண்டு நடத்துவது எந்த அளவுக்குச் சரி? நேற்று வரை, இதுதான் புரட்சிகரமானது, முன்னேற்றமானது என்று நினைத்து வந்தோம். இன்று அனுபவ வாயிலாக அது உண்மை இல்லை என்று அறிந்த பிறகு, வறட்டுத் தத்துவத்தை வைத்துக் கொண்டு என்ன செய்வது? உலக சித்தாந்தங்களே பெரும் மாற்றம் அடைந்து வரும் போது, கவைக்கு உதவாத சட்டம் கொண்டு வருகிறார்களே என்று நினைக்கத் தோன்றுகிறது.

"முதலில் புதிய வேலை வாய்ப்புகளை உருவாக்க வேண்டும். அதற்குச் சட்டம் கொண்டு வரட்டும். எத்தனை ஆயிரம் ஊழியர்கள் பணி நிரந்தரம் இன்றி இருக்கிறார்கள்! புரோபெஷனரி, டெம்பரரி, டிரெயினி என்று எத்தனை வார்த்தை ஜாலங்கள்! இவர்களுக்குப் பணி நிரந்தரம் செய்யட்டும். நியாயமான ஊதியம் கொடுக்கட்டும். இதுதான் அவசியம்; அவசரம் கூட. அதை முதலில் செய்யட்டும்!"

— சாருகேசி

அட்டை வண்ணப்படம்: **உத்ரா**



* மனதில் உறுதி வேண்டும்!



* தெளிவாகக் கூறிவிட்டார்.



* திவாரி காலத்துக்கு 'டீ. வி. திரும்புகிறதா?

# திவாரி காலத்துக்குத் திரும்பி விட்டதா டீவி?

கடந்த ஆறு மாதங்களாகப் ''புலி வருகிறது.'' ''புலி வருகிறது'' என்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். கடைசியில்வரவேயில்லை. வானொலிக்கும் தொலைக்காட்சிக்கும் தன்னாட்சி வழங்கும்பிரஸார் பாரதி மசோதா நாடாளுமன்றத்தின் அடுத்த கூட்டத்துக்குத் தள்ளிப் போய்விட்டது.

பெரும் ஆவலுடன் எதையெதையோ எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தவர்களுக்கு அமைச்சர் உபேந்திரா தெளிவாகக் கூறிவிட்டார்: ''மேற்கத்திய நாடுகளில் இருப்பது போலக் கண்மூடித்தனமான சுதந்திரம் டெலிவிஷனுக்கு வழங்கப்பட மாட்டாது. டெலிவிஷன் அதிகாரிகளுக்கு வழிமுறைகளும், கட்டுப்பாடுகளும் இருக்கும்.''

டில்லி நிகழ்ச்சிகள் இதனைக் கோடிட்டுக் காண்பிக்கின்றன. கொஞ்சம் கொஞ்சமாக அவை பழைய நாட்களுக்குத் திரும்பிப் போய்க் கொண்டிருப்பதாகவே தோன்றுகிறது. முன்பு ராஜீவ் காந்தி திரையில் தோன்றிக் கொண்டிருந்தார். இப்போது அந்த இடத்தை ராம் விலாஸ் பாஸ்வான் பிடித்துக் கொண்டிருக்கிறார். நாட்டு நடப்புகள் (Current Affairs), செய்தி சார்புடைய நிகழ்ச்சிகள் ஆகியவற்றிலும் கொள்கைக் குளறுபடிகள் பிரதிபலிக்கின்றன.

டில்லியே இப்படியென்றால் சென்னை சும்மா இருக்குமா? ஒரு படி மேலேயே போய் விட்டது. ஜூன் இரண்டாம் தேதி ஒளிபரப்பாகிய 'செய்தி விமர்சனம்' பார்த்தவர்களுக்கு இது புரியும்.

திடுமெனப் பலரது பேட்டி. தச்சுத் தொழிலாளி, காலணி தைப்பவர், தங்க நகை விற்பனையாளர் போன்றோரிலிருந்து தமிழறிஞர் வரை. அனைவருமே ஒருசேரத் தேசிய முன்னணி அரசை 'ஓகோ... ஓகோ' வென்று பாராட்டித் தீர்த்தார்கள். பாலும் தேனும் பரவி ஓடுவதைப் போன்ற தோற்றத்தை உண்டு பண்ணினார்கள். ''தேடித் தேடிச் சென்று கண்ணீர் துடைக்கும் அரசு'' என்றார் ஒருவர்.

இந்தத் திடீர்ப் புகழாரங்களுக்குக் காரணம் என்னவென்று நிகழ்ச்சி நிறைவடையும் வரையில் புரியவில்லை. கடைசியில் அறிவிப்பாளர் தோன்றினார். ''தேசிய முன்னணி அரசு பதவியேற்று ஆறு மாதங்கள் நிறைவு பெற்றதைத் தொடர்ந்து இந்தக் கருத்துத் தொகுப்பு'' என்று அகமும் முகமும் மலரத் திரை நிறைந்த சிரிப்புடன் தெரிவித்தார்.

''மத்திய அரசிடம் மாறுபட்ட கருத்துக்கள் கொண்டவர்கள் யாருமே கிடைக்கவில்லையா? அல்லது இவர்கள் வேண்டுமென்றே ஒதுக்கி விட்டார்களா?'' என்கிற கேள்வியுடன், 'செய்தி ஒலிபரப்புத் துறை மீண்டும் கே. கே. திவாரி காலத்துக்குத் திரும்பி விட்டதா?' என்கிற சந்தேகத்தையும் இந்நிகழ்ச்சி ஏற்படுத்தியது.

டில்லியிலிருந்து ஒளிபரப்பாகும் விளம்பரதாரர் தொடர்கள் வரவரத் தரம் குறைந்து வருகின்றன. (தப்பி நிற்பது 'திப்பு சுல்தான்' மட்டும்.) சமீபத்தில் முடிவடைந்த தெனாலி ராமன் கதைகளும் இந்தப் போக்குக்கு விலக்கல்ல.

கதாபாத்திரங்களுக்குப் பொருத்தமில்லாத நடிகர்கள். எடுபடாத நகைச்சுவை. செயற்கைத்தனம் மிகுந்த நடிப்பு. விஜய நகர மன்னரைப் பார்த்த போது பரிதாபமாக இருந்தது. மண் வாசனையைப் புரிந்து கொள்ளாத தயாரிப்பு.

'தாலாட்டு' படத்துக்குப் பிராயச்சித்தம் செய்து விட்டார்கள். இரண்டு வார வேதனைக்கு மாற்றாக அமைந்திருந்தது, கே. பாலசந்தரின் 'மனதில் உறுதி வேண்டும்.' பெரிய திரையில் ஏற்கெனவே பார்த்திருந்தாலும் மீண்டும் சின்னத் திரையிலும் பார்க்க வேண்டும் என்கிற ஆர்வத்தைத் தூண்டிய படம். டிராயிங் ரூம் ஆடியன்ஸுக்கு ஏற்ற படம் என்பதற்கு இது உதாரணம்.

எதிரொலியில் 'தாலாட்டு' படம் பற்றிக் கடிதமே படிக்கவில்லையே! ஒரு ரசிகர் கூடவா அந்தப் படத்தைப் பற்றிய கருத்துக்களைத் தெரிவிக்கவில்லை? அல்லது...

— கிச்சாமி




# கல்கி

1990 ஜூன் 17
மலர் : 48 இதழ் 46
பிரமோதூத ஆனி 3




## முதல்வரின் பிறந்த நாள்

ராஜராஜன் விருது பெற்றுப் பெருமையுற்ற கலைஞர் கருணாநிதியின் பிறந்த நாள் விழா தமிழகமெங்கும் கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. நள்ளிரவில் கேக் வெட்டுதல், சென்னை நகரச் சுவர்கள் கொள்ளாத அளவில் போஸ்டர் ஒட்டுதல், பல்வேறு அரசு இலாக்காக்களின் விளம்பரங்கள், பார்வையற்ற குழந்தைகளுக்குப் பிரியாணி, சமுதாய நலனுக்கான முதல்வரின் நிதிக்கு நன்கொடை வசூல், ரத்ததானம், கண்காட்சி, பாராட்டுக் கூட்டங்கள், புகழ் மாலைகள் என்று ஏக தடபுடல்! நாமும் முதல்வருக்குப் பல்லாண்டு கூறுகிறோம்.

முதல்வரின் பிறந்த நாள் என்பது நம்மைப் பொறுத்தமட்டில் அவரது ஆட்சியின் குறை நிறைகளை மதிப்பிடக் கிடைத்த ஒரு சந்தர்ப்பம். அப்படிப் பார்க்கும் போது, நமது கவனத்தை முதலில் கவர்வது முதல்வரின் சுறுசுறுப்பு. கோட்டையில் கோப்புகளைத் துரத்தியபடியே தமிழகமெங்கும் சுற்றுப் பயணம் செய்கிறார். மாநாடுகளிலும் பொதுக் கூட்டங்களிலும் கலை, திருமண விழாக்களிலும் பங்கேற்றபடியே முரசொலிக்கும் எழுதுகிறார். இத்தனை பரபரப்பான பணிகளுக்கிடையில் கல்கியுடன் ஒரு பேனாப் போர் நடத்தவும் நேரம் ஒதுக்குகிறார்! பதினாறு வயதினர் கூட இந்த அறுபத்தேழு வயது இளைஞரிடம் தோற்றுப் போக வேண்டியதுதான்!

தமிழகத்தின் தொழில்வளப் பெருக்கத்துக்கு மெய்யான ஈடுபாட்டுடன் திட்டங்கள் வகுத்துச் செயல்படுத்தி வருகிறார் முதல்வர். ஐம்பது கோடிக்கு அதிகமாக முதலீடு செய்து தொடங்கப்படும் புதிய தொழிலகங்களுக்கு விற்பனை வரிச் சலுகை; பிற்பட்டதிலும் மிகவும் பிற்பட்ட வட்டங்கள் என்று முப்பது வட்டங்களைத் தேர்ந்தெடுத்து, தொழில் தொடங்கச் சிறப்புச் சலுகைகள், என்றெல்லாம் நூதன உத்திகளைக் கையாள்கிறார். கூட்டுத்துறையிலும் மத்திய அரசுத் தொழிலகங்களிலும் முதலீடுகள் அதிகரிக்க வழிவகுத்திருக்கிறார். இவையெல்லாம் மெய்யாலும் பயன்தர மின் உற்பத்தி அதிகரிக்க வேண்டும் என உணர்ந்து, அதிலும் கவனம் செலுத்தி வருகிறார். தொழில் வளர்ச்சிதான் மெய்யான முன்னேற்றம் என்பதால் தொடர்ந்து இவ்விஷயத்தில் தீவிர கவனம் செலுத்துவார் என்று எதிர்பார்க்கிறோம்.

பிற்படுத்தப்பட்டோர் நலனில் தமிழக முதல்வர் காட்டும் அக்கறை அளப்பரியது.









ஏற்கெனவே பட்டதாரிகள் இல்லாத குடும்பத்திலிருந்து வரும் மாணவர்களுக்குக் கூடுதல் மார்க் போடுவது என்பது நல்ல யோசனை என்றாலும் இந்தச் சலுகை துஷ்பிரயோகம் ஆகாதிருக்கச் சலுகை பெறுபவர்களின் பெயர்கள் அறிவிக்கப்பட வேண்டும் என்ற நியாயமான கோரிக்கையையும் அரசு ஏற்க வேண்டும். பிற்படுத்தப்பட்டோருக்கான ஒதுக் கீட்டில் இருபது சதத்தை மிகவும் பிற்படுத்தப்பட்டோருக்கு ஒதுக்கியது, ஜாதி வித்தியாசம் பாராமல் பெண்களுக்குப் பட்டப்படிப்பு வரை இலவசக் கல்வி போன்ற திட்டங்கள் சலு கைகளுக்குள் நியாயச் சலுகைகள் வழங்கும் சாணக்கியங்கள்.

காவிரி நதி நீர்ப் பிரச்னைக்கு நடுவர் குழு அமைந்தது கருணாநிதிக்குப் பிறந்த நாள் பரிசு போல விளங்கினாலும், இதற்காக உச்ச நீதிமன்றம்வரை சென்று வாதாடிய தஞ்சை விவசாயிகளுக்கே நமது முதல் நன்றி உரித்தாகிறது.

சமுதாய நலத் திட்டங்கள் என்ற அடிப்படையில் கருணாநிதி, எம். ஜி. ஆரின் இலவச அரசியலைத் தொடர்ந்து நடத்தி வருவது செல்வாக்கைப் பெருக்கிக் கொள்வதற் காக இருக்கலாம்; ஆனால் நாடாளுமன்றத் தேர்தலோ, தமிழகத்தில் ஆட்சியில் இருப்பது சிறுபான்மை மக்களின் ஆதரவு பெற்ற அரசே என்பதை நமக்கு நினைவூட்டுகிறது. பாண்டிச் சேரியில் தி. மு. க. ஆட்சி நடந்தாலும் அது பெருமைக்குரிய வெற்றியாக அமையவில்லை.

ஆங்கில மீடியத்தில் படிக்கும் குழந்தைகளுக்கு மட்டும் சம்பளம் வசூலிப்பது இரு மொழித் திட்டத்துக்கு உகந்ததாக இல்லை என்ற வாழப்பாடியாரின் கருத்து முதல்வரின் கவனத்துக்கு உரியதே.

எதிர்க் கட்சித் தலைவியாகிய ஜெயலலிதாவுக்கு இரண்டு தடவைகளில் இழைக் கப்பட்ட மாபெரும் அநீதிகளும், பாக்கெட் சாராய உற்பத்தி, விநியோகமும் கலைஞர் ஆட்சியில் துடைக்க முடியாத கறைகளாக ஒட்டிக் கொண்டிருக்கின்றன.

தமிழக மீனவர்களை விடுதலைப் புலிகளின் அத்துமீறல்களிலிருந்து காப்பாற்ற முடியாமல் திணறும் முதல்வர், புலிகளின் உண்மை சொரூபத்தை இப்போதாவது உணர்ந் தால் நல்லது.

சில தவறான போக்குகளைத் திருத்திக் கொண்டும், சில பின்னடைவுகளுக்கு இடம் தராதிருக்கக் கட்சிக்காரர்களிடம் ஓரளவு கண்டிப்புக் காட்டியும், எந்தச் சாராரிடமும் துவேஷம் பாராட்டாமலும் கலைஞர் நடந்து கொண்டால், அடுத்த பிறந்த நாளுக்கு முன்னதாக அவர் செல்வாக்கு மேலும் உயர்ந்து, இன்றுள்ளது போலல்லாமல் பெரும் பான்மை மக்களின் ஆதரவே தி. மு. க. வுக்குக் கிடைக்க வாய்ப்புண்டு.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# உங்கள் நம்பகமான ஃபாரெக்ஸ் இப்போது, சுவையிலே சிகரம்!

உங்கள் குழந்தைக்கு நான்கு மாதம் ஆகும்போது அவனுக்கு புதிய சுவைமிக்க ஃபாரெக்ஸ் துவக்குங்கள். 3 முதல் 4 தேக்கரண்டி வெது வெதுப்பான நீரில் ஒரு தேக்கரண்டி ஃபாரெக்ஸ் கலந்து கொடுங்கள். ஃபாரெக்ஸ் சுவை மிக்கது. முன்னைவிட அதிக ஊட்டச்சத்து மிக்கது.




- சுவை மிக்கது
- ஊட்டச்சத்து மிக்கது

**ஃபாரெக்ஸ்® - சுவையுடன் வளரும் வழி.**

GX/66/213 TML



மகத்தான வெற்றி!



புதிய உத்தரவு!

# மகேஷ் யோகியும் பிரதமரின் தொகுதியும்!

● இனி 'உத்யோக் பவ'னை 'ஒரியா பவன்' என்றே சொல்லலாம் போல் அத்தனை ஒரிசாக்காரர்கள் அமைச்சர்களாகவும், அதிகாரிகளாகவும் அங்கே இருக்கிறார்கள். ஒரு இலாகாவில் மட்டும், செயலரைத் தவிர பாக்கி எல்லாருமே ஒரியா மொழி பேசுபவர்கள்; அல்லது ஒரிசா 'கேடர்' அதிகாரிகள்! போகிற போக்கைப் பார்த்தால், ஒரியா மொழி தெரியாமல் காலம் தள்ளுவது கஷ்டம் என்று புரிந்து கொண்டு, மற்றவர்கள் கூட 'முப்பது நாளில் ஒரியா கற்பது எப்படி?' என்ற புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்து விடுவார்கள் போலிருக்கிறது!

● காஷ்மீர் விவகாரம் பொறுப்பு பெர்னாண்டஸிடமிருந்து பறிக்கப்பட்ட பின்னரும் கூட, அது தொடர்பாகப் பேச அவர்தான் அமெரிக்காவுக்கு அனுப்பப்பட்டுப் போயிருக்கிறார்! என்ன சாதித்தார்? கோர்பசேவும் — புஷ்ஷும் உச்ச மாநாடு நடத்திப் பேசினார்கள் அல்லவா? அப்போது போகிற போக்கில் காஷ்மீர் பிரச்னை குறித்தும் கவலை தெரிவித்துக் கருத்துப் பரிமாறிக்கொண்டார்கள். அந்தக் குறிப்பை அதிகாரிகள் உறையிலிட்டுத் தர, பெர்னாண்டஸ் வாங்கிக்கொண்டு வந்தார். மகத்தான வெற்றிதான்!

● ஒரிசாவின் மிகவும் பின்தங்கிய காலஹண்டி மாவட்டத்துக்கு விடிவு காலம் பிறக்கும் போலிருக்கிறது. ஆழ்நிலை தியானத்தை அறிமுகப்படுத்திய மகரிஷி மகேஷ் யோகியின் அமைப்பு, இந்த மாவட்டத்தைச் செழிப்பாக்க முடியும் என்று ஒரு திட்டம் கொடுத்தது. அதிகாரிகள் அத்தனை உற்சாகம் காட்டாத போது, பிரதமர் வி. பி. சிங்கை அணுகியது அமைப்பு. பிரதமர் சரி என்று சொன்னாரோ இல்லையோ, உடனே இந்துஸ்தான் உரத் தொழிற்சாலையும், விவசாய விஞ்ஞானிகள் பலரும் தங்கள் ஒத்துழைப்பைக் கொடுக்கத் தயார் என்று சொல்லி விட்டார்கள். அங்குள்ள பழங்குடி மக்களுக்குப் பயிரிடும் பயிற்சி மட்டுமல்ல, கடனுதவிகளும் ஏற்பாடாகி விட்டன. பிரதமரின் தொகுதியான பதேபூரிலும், முப்பது கோடி ரூபாய்க்கு, கரும்பை ஆதாரமாகக் கொண்ட புரோட்டின் தொழிற்சாலை அமைக்க, மகேஷ் யோகியின் அமைப்புக்கு அனுமதி கிடைத்து விட்டது. நிறுவனம் பதிவு செய்து, வேலையும் தொடங்கி விட்டது!



இவரது அறிக்கை....



...இவருக்குப் பிடிக்காது!

● 'தேசிய அளவில் பரிசுகள் எதுவும் பெறாத என். டி. ஆரின் திரைப்படம் ஒன்றை மட்டும் குட்டித் திரையில் எப்படிக் காண்பிக்கலாம், அவருக்கு மட்டும் ஏன் சலுகை?' என்று அமைச்சர் உபேந்திராவிடம் சண்டைக்குப் போய் விட்டார்கள் பல தயாரிப்பாளர்கள். பார்த்தார் அமைச்சர். ''தொடர்ந்து இருபத்தைந்து வாரங்கள் வெற்றிகரமாக, எந்த மாநில மொழித் திரைப்படம் ஓடியிருந்தாலும் அனுப்புங்கள். டி.வி.யில் காண்பிக்கிறோம்!'' என்று புதிய உத்தரவு போட்டு விட்டார் உபேந்திரா.

● தகவல் தொடர்புத் துறை அமைச்சகத்தின் ஆலோசனைக் குழுக் கூட்டத்தில், உறுப்பினர்களான எம். பி.க்களுக்கு, உத்தேசக் கொள்கைகள் அறிக்கை கொடுக்கப்பட வேண்டும். கூட்டம் ஆரம்பிக்கப் பட்டவுடன், அமைச்சர் ஜானேசுவர் மிச்ரா விடம், அதைக் கொண்டு வந்து கொடுத்தார்கள் அமைச்சகத்தினர். ''இதை யார் கேட்டார்கள்? இந்தக் கொள்கைகள் எல்லாம் ஒத்துவராது என்று தெரியாதா? தொலைநோக்குக் கொள்கைகள்தாம் இப்போதைய தேவை. அந்த அடிப்படையில் வேறு அறிக்கை தயார் செய்து விரைவில் கொடுத்து விடுகிறோம். இப்போதைக்கு மன்னியுங்கள்!'' என்று தொங்கிப் போன முகத்துடன் அமைச்சர் மிச்ரா கேட்டுக் கொண்டார். அமைச்சருக்கு என்ன கோபம்? அமைச்சகம் கொடுத்த அந்த அறிக்கை, இலாக்கா மாறிப் போன அமைச்சர் உன்னி கிருஷ்ணன் தயாரித்தது!

தொகுப்பு: **சித்தார்த்**

# ஒரு புதிய, நவீன பிளாக் உருவாக உதவுங்கள்...
# மக்கள் சேவைக்காக

1985 ஏப்ரல் 14-ஆம் தேதி, அன்றைய குடியரசுத் துணைத்தலைவர் மேதகு திரு. ஆர். வெங்கடராமன் அவர்கள் ஆஸ்பத்திரி கட்டடத்தைத் திறந்துவைத்த நாள் முதலே இது எல்லா வகையான மருத்துவ சிகிச்சைகளையும் அளித்து வருகிறது. பல துறைகளைக் கொண்ட இந்த ஆஸ்பத்திரி, புற நோயாளிகளுக்கான பலப்பல வசதிகளை அளிக்கிறது. அத்துடன், 20 படுக்கைகள் கொண்ட பிளாக் ஒன்றும், 2 ஆப்பரேஷன் தியேட்டர்களும், ஓர் ஆம்புலன்ஸும் உள்ளன.





## நல்ல நோக்கத்தில் நீங்களும் பங்கு பெறுங்கள்

இன்று இன்னும் பலருடைய தேவைகளையும் எதிர்பார்ப்புகளையும் நிறைவேற்றும் நோக்கத்தோடு, இந்த ஆஸ்பத்திரி தன் பணிகளை மேலும் பயனுள்ள முறையில் விரைவாக விரிவுபடுத்த முனைந்துள்ளது. தீவிர சிகிச்சைப் பிரிவு (ICU) மற்றும், 30 படுக்கைகளுடன் எல்லா வசதிகளும் கொண்ட ஒரு பிளாக் உள்பட இந்த ஆஸ்பத்திரி விரிவுபடுத்தப்படுகிறது.

மக்கள் சேவையே மகத்தானது என்ற மனிதாபிமான எண்ணம் கொண்ட உங்களைப் போன்றவர்களின் ஒத்துழைப்புடன்தான் இந்த நோக்கம் நிறைவேற முடியும். நீங்கள் குறிப்பாக ஒரு அறை கட்டுவதற்கோ, அல்லது ஒரு குறிப்பிட்ட பெயரில் ஒரு படுக்கை அமைப்பதற்கோ நன்கொடை வழங்கலாம்.

**உதவும் கரம் உங்களுடையது.**
**தாராள மாக வழங்குங்கள்.**

கீழ்க்கண்ட நன்கொடை வழங்குவதில் நான் மிகவும் பெருமைப்படுகிறேன்.

- ☐ ரூ.40,000/- .............................................. பெயரில் ஓர் அறை கட்டுவதற்கு
- ☐ ரூ.5,000/- .............................................. பெயரில் ஒரு படுக்கை அமைப்பதற்கு
- ☐ ரூ ........................................ கூடுதல் வசதிகளை அமைக்க (நீங்கள் விரும்பும் தொகையை வழங்கலாம்).
- ☐ எனக்கு மேலும் விவரங்கள் தேவை. இது பற்றிய பிரசுரத்தை அனுப்பவும் அல்லது உங்கள் பிரதிநிதியை சந்திக்கச் சொல்லவும்.

பெயர்: ..............................................................

முகவரி: ..............................................................

.............................................. தொலைபேசி: ..............

அனுப்ப வேண்டிய முகவரி: செயலாளர், **இந்து மிஷன் ஆஸ்பத்திரி**, தாம்பரம்,
சென்னை 600 045. தொலைபேசி: 404222

**தாராளமாக் வழங்குங்கள்**

இந்து மிஷன் ஆஸ்பத்திரிக்கு வழங்கப்படும் நன்கொடைகள், வருமான வரிச் சட்டத்தின் 80G பிரிவின் கீழ் விலக்குப் பெற்றவை.

# இந்து மிஷன் ஆஸ்பத்திரி

# ஒரு சிங்காரமும் ஓராயிரம் வெற்றிக் கதைகளும்!




சிங்காரம் ஒரு பட்டதாரிதான். மேஜை முன் நாற்காலியில் உட்கார்ந்து செய்யக் கூடிய வேலையாகக் கிடைத்தால் சிங்காரமாக அமர்ந்து செய்வதற்கும் அவன் தயார்தான். ஆனால் வேலை ஏதும் கிடைக்கவில்லையே... 'என்ன வேலையானால் என்ன, சம்பாதிப்பதுதான் முக்கியம்' என்ற கருத்தில் ஆட்டோ டிரைவர் ஆனான் சிங்காரம். ஒரு நாளைக்கு இத்தனை ரூபாய் என்று ஆட்டோ முதலாளிக்கும் கொடுத்து விட வேண்டும். மிஞ்சுவதில் பெட்ரோல் செலவு, டிபன் செலவு எல்லாம் போக வீட்டுக்குக் கொண்டு போகக் கூடிய தொகை அற்ப சொற்பமாகவே இருக்கும்.

ஒரு நாள் நண்பர் ஒருவர் மூலமாக ஒரு ஸெகண்ட் ஹாண்ட் லாரி விற்பனைக்கு வருவதாகக் கேள்விப்பட்டான் சிங்காரம். ஒன்றரை லட்ச ரூபாய். 'நம்மிடம் ஏது?' என்று சும்மா இல்லாமல், ஒரு நிதி நிறுவனத்தை அணுகி உதவி கேட்டான். 'உங்கள் முதலீடும் ஓரளவு இருக்க வேண்டுமே' என்றனர். வீட்டிலிருந்த சில நகை நட்டுக்களை விற்றுக் காசாக்கினான் சிங்காரம். சில உறவினர்கள், நண்பர்கள் ஆளுக்குக் கொஞ்சமாக உதவினார்கள். முப்பதாயிரத்துடன் நிதி நிறுவனத்தினிடம் போனான். பாக்கிப் பணத்தை நிறுவனம் கடனாக அளிக்க, லாரி உரிமையாளன் ஆனான். இன்று அவன் பன்னிரண்டு லாரிகளுக்குச் சொந்தக்காரன்!

சிங்காரம் இவ்வாறு உயரக் காரணங்கள் மூன்று. முதலாவது அவனது விடா முயற்சி, திறமை. இரண்டாவது தக்க சமயங்களில் அவனுக்கு நிதி உதவிகள் அளித்த நிறுவனம். மூன்றாவது நாட்டின் பொருளாதாரச் சூழ்நிலை.




சரக்குப் போக்குவரத்து இல்லையெனில் எந்தத் தொழிலுமே முன்னேற முடியாது. இந்தியாவோ தொழில் துறை வளர்ச்சிக்கு முக்கியத்துவம் தந்து வரும் — வளர்ச்சி அடைந்து வரும் — நாடு. எனவே லாரி போக்குவரத்து இங்கு இன்றியமையாததாகிறது.

இந்தத் துறை எவ்வளவு சக்தி வாய்ந்தது என்பதற்கு ஓர் உதாரணம் வேண்டுமானால், சிலி நாட்டில் அல்லெண்டேயின் ஆட்சியைக் கீழே இறக்கவே காரணமாக விளங்கியது லாரி டிரைவர்கள் யூனியன் செய்த வேலை நிறுத்தம்தான் என்பதைக் குறிப்பிட



* ஆர். தியாகராஜன்

லாம்.

இவ்வளவு முக்கியமான துறையாகச் சரக்குப் போக்குவரத்துத் துறை விளங்குவதால் தான் லாரி வாங்கப் பண உதவி செய்யும் நிதி நிறுவனங்களும் சக்கைப் போடு போடுகின்றன. ஆனால் ஒன்று. கடன் தந்தால் மட்டும் போதாது. கடனைத் தவணை முறைகளில் திரும்பப் பெறுவதிலும் திறமை காட்ட வேண்டும். இல்லையெனில் நிறுவனம் அதோகதியாகி விடும்!

இதிலேதான் வங்கிகள் பின்தங்கி விடுகின்றன. அவர்களிடம் பணம் நிறைய இருக்கிறது. ஆனால் ராஜேன்மெய்ன் போன்றவர்களிடம் ஏமாந்து விடுவது ஒருபுறமிருக்க, கொடுத்த கடனைத் திரும்ப வசூலிக்கும் ஆற்றலும் குறைவாக இருக்கிறது. எனவே கடன் வசூல் திறனில் முன்னணியில் இருக்கும் நிதி நிறுவனமும் வங்கியும் இணைந்து செயலாற்றினால் நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு இன்னும் சிறப்பான சேவை செய்ய முடியுமே என்பதாகக் கருதப்பட்டது.

இந்த எண்ணத்தின் செயல் வடிவமாகத்தான் ஸ்ரீராம் டிரஸ்ட் நிறுவனமும் ஸிடி யூனியன் வங்கியும் இணைந்து போக்குவரத்துத் துறைக்கு உதவ முன் வந்திருக்கின்றன.

ஸ்ரீராம் குருப் இயக்குனர் ஆர். தியாகராஜன் சொன்னார்: ''வடக்கே எங்களிடம் வாகனக் கடன் பெற கியூவில் நிற்கிறார்கள்! ஏன் தெரியுமா? அவர்கள் இதுவரை லேவாதேவிக்காரர்களிடம் சிக்கி அவதிப்பட்டுக்கொண்டிருந்தார்கள். லாரியை மட்டுமின்றி அவர்கள் சொத்துக்கள் எல்லாவற்றையும் அடமானம் வைக்கச் சொல்லிப் படுத்தி எடுத்து விடுவார்கள்! எங்களிடம் இப்படிப்பட்ட கொடுமைகள் இல்லை என்பதுடன் வட்டி விகிதமும் அவர்களுக்குக் கட்டுப்படியாகக் கூடிய அளவில் உள்ளதால் சந்தோஷமாக இருக்கிறார்கள்.

''இப்போது ஸிடி யூனியன் வங்கி எங்களோடு இணை சேர்ந்திருப்பது போல் வேறு பல வங்கிகளும் வேறு பல நிதி நிறுவனங்களுடன் இணைந்து பணியாற்ற வேண்டும் என்பதே எங்கள் விருப்பம். லாரி தொழிலில் மட்டுமின்றி வேறு பல துறைகளிலும் கூட இந்தச் செயல்பாடு நல்ல பலனளிக்கும். வங்கிகளுக்கு வசூல் பொறுப்பு கணிசமாகக் குறையும். அதே சமயம் பல்வேறு துறைகளுக்கு நிதி வசதிகள் தாராளமாகக் கிடைக்கும். இதுபோன்ற கூட்டு முயற்சிகள், வட்டி விகிதம் குறையவும் உதவும்.''

இந்தப் புதிய அணுகுமுறை பலரது கவனத்தையும் கவர்ந்தது. ஏராளமான சிங்காரங்களின் வெற்றிக் கதைகள் எழுதப்பட வேண்டும். கடினமான தொழில்களைத் துணிச்சலுடன் மேற்கொள்ளும் எல்லோரையும் ஊக்குவித்தால்தானே நாடு வேகமாக வளர்ச்சி பெறும்!

— நமது நிருபர்கள்.

## ஒரேயொரு மாணவருக்காக...




மத்தியப் பிரதேச மாநிலத்திலுள்ள போபால் பல்கலைக் கழகத்தில் பெர்ஷியன் மொழிக்கென்று தனித்துறை ஒன்று உள்ளது. இத்துறையில் ஒரு பேராசிரியர், ஒரு ரீடர், ஒரு விரிவுரையாளர் என்று மூவர் பணியாற்றுகின்றனர். அது சரி, இதிலென்ன விசேஷம் என்கிறீர்களா? இங்கு ஒரே ஒரு மாணவர்தான் பெர்ஷியன் மொழியைக் கற்றுக்கொண்டு வருகிறார். இவர் ஒருவரை நம்பித்தான் மூன்று ஆசிரியர்களுடன் கூடிய தனித்துறையே இயங்கி வருகிறது!

தகவல்: தக்கோலம் புகாரி.



# ‘நீங்களும் ஹீரோதான்’

‘சினிமா ஹீரோக்களைத் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கூத்தாடாதீர்கள்! உங்கள் உழைப்பை, படிப்பை, காலத்தை, சொந்தக் காசையெல்லாம் விரயமாக்கி ரசிகமன்றம் அது இது என்று நாசமாய்ப் போகாதீர்கள். நீங்கள் சினிமாவில் பார்க்கும் லட்சிய ஹீரோ சொந்த வாழ்க்கையில் அப்படி இருப்பதில்லை’ — இதுதான் மெஸேஜ்.

காளியப்பன் ஊருக்கு நல்லவர். கடமையுணர்வு, கட்டான உடல், கண்ணியம் கொண்ட லட்சிய ஹீரோ. அவுட்டோர் ஷூட்டிங் யூனிட்டுடன் ஊருக்குள் வந்து இறங்கிய சினிமா ஹீரோ டைகர் பிரேம்நாத்தின் (நிழல்கள் ரவி) மெய்க்காப்பாளனாய் நியமிக்கப்படுகிறார். சினிமா ஹீரோவிடம் சொக்கிப் போய்க் கிடந்தவர் ஒருநாள் — கல்யாணம் நிச்சயமாகியிருந்த உள்ளூர்ப் பெண் ஒருத்தியை இந்த ஹீரோ கட்டிலுக்கு இழுக்கும் காட்சியை நேருக்கு நேர் கண்டு, அந்தப் பெண்ணை மீட்டு, ஹீரோவைப் புரட்டிப் போட்டு எடுக்க, அந்தப் பெண் அலங்கோலக் கண்ணீருடன், ‘அண்ணே, இது வெளிய தெரிஞ்சா என் கல்யாணம் நடக்காது. எங்கப்பா தூக்குப் போட்டுக்குவார்,’ என்று கெஞ்ச, அவர் இந்த அவலத்தை வெளியிலும் சொல்ல மாட்டாமல், அந்த ஹீரோவிடம் குரோதத்தை மறைக்கவும் முடியாமல் அல்லாடுவது படம் நெடுகச் சுறுசுறு ஓட்டம்.

இந்த லட்சணத்தில் ரசிக மன்றத் திருக்கூட்டத்தார் தங்கள் தலைவர் பேரில் கட்டடம் நிறுவ நிதி வசூல் செய்வதும், அதற்குக் காளியப்பனிடமே நிதி கேட்க, அவர் பொங்கிப் பொருமி, ‘உங்களுக்கு வேணுமானா கேளுங்க, தர்றேன். அந்தப் பொறுக்கிக்கு ஏதாவது கேட்டீங்க, நடக்கறதே வேற,’’ என்று வெடிக்க, அதன் விளைவாக ஏற்படும் மோதலில் ரசிக மன்றக் கும்பலை நம்ம ஹீரோ நார் நாராய்க் கிழித்துப் போட, பஞ்சாயத்தில் அவரை நிறுத்தி, ரவியிடம் மன்னிப்புக் கோரும்படி பஞ்சாயத்துத் தலைவர் கோர, இவர் மறுக்க, அப்படி அவர் செய்தது என்ன என்று பஞ்சாயத்துத் தூருவ, இவர் சொல்ல முடியாமல் தவிப்பதும் அதற்காக அவரை ஊரை விட்டு விலக்கி வைப்பதும் நெஞ்சைத் தொடும் யதார்த்தம்.

பாவம், நம்பியார், பி. எஸ். வீரப்பா! அந்தக் காலத்து வில்லன் நடிகர்களுக்கு ஃபீல்டில் மவுசில்லை என்பதை என்ன நாசூக்காய்க் காட்டியிருக்கிறார்!

ஹீரோயின் கிறுக்குக்காக ஏங்கி, ஊர்க் கிழடுகள் எல்லாம் வாலிப வேடம் கட்டி அலைவது அபத்தமான கேலிக்கூத்து.

ஹீரோ ரவியின் போலி வேஷங்களும், பரிவும், மிடுக்கும், பசப்பும், பாசாங்கும் ஏதோ ஒரு பிரபலத்தைத் தோலுரித்துக் காட்டும் குத்தலாய் முணுமுணுக்கப்படுகிறது. அடுத்த முதல் மந்திரி தாம்தான் என்று அவர் காணும் ஆசைக் கனவு — அடேங்கப்பா! அவருடைய செகரட்டரி சின்னி ஜெயந்த் செமை ஜால்ரா.

குரு கவுண்டமணி வீட்டிலேயே அண்டாவைத் திருடி விற்று அந்தப் பணத்தில் அவருக்கே காணிக்கை செலுத்தும் சீடன் செந்தில், விலா நோவு ஏற்படுத்தி அமர்க்களம் பண்ணியிருக்கிறார்.

சினிமா மோகம் பற்றிய வாத்தியார் வீரராகவனின் அலசல்கள் மனசை நெருடுகிறது.

‘‘சினிமாக்காரங்களா அவங்க பின்னால உங்களைச் சுத்தச் சொல்லிக் கூப்பிட்டாங்க?’’ என்று கடைசியாய் ஒரு போடு போட்டுத் தம்மைக் காப்பாற்றிக் கொண்டு விட்டார், டைரக்டர். நமக்குத் தேவைதான்.

— பி. எஸ். எஸ்.

# ஒரு போஸ்ட் கார்டு போதும்!...

நானும் வீட்டிலிருந்தபடியே
ஓய்வு நேரத்தில் விவேகானந்தா
கல்வி நிலையத்தில் ஆங்கிலம்
கற்க விரும்புகிறேன்.
எனவே பின் பக்கத்திலுள்ள
எனது முகவரிக்கு தபால்
முறைப் பயிற்சி பற்றிய
தகவல் புத்தகத்தையும்
விண்ணப்ப மனுவையும்
உடனே அனுப்பி வைக்கவும்.
இப்படிக்கு
எஸ். செல்வகணேஷ்

WRITE PIN CODE IN ADDRESS




விவேகானந்தா கல்வி
நிலையம்,
தபால் பெட்டி எண் 4986
9 மேட்லி ரோடு,
சென்னை PIN 600017

ஒரு போஸ்ட் கார்டு உங்களது வாழ்க்கையில் மிகப் பெரிய மாற்றத்தை ஏற்படுத்தப் போகிறது என்று நாங்கள் சொன்னால் உங்களுக்கு வியப்பாகத் தோன்றலாம். ஆனால் உண்மை அது தான்!.

★ ஆங்கிலத்தில் பேசினால் ஏதாவது தவறாகப் பேசி விடுவோமோ என்ற தயக்கமின்றி சரளமாகப் பேச...

★ இலக்கணப் பிழை ஏற்பட்டுவிடுமோ என்ற பயமின்றி ஆங்கிலத்தில் கடிதங்கள், கட்டுரைகள் எழுதும் ஆற்றல் பெற...

தமிழகத்தின் தலைசிறந்த கல்வி நிலையம் என்ற தனிப்புகழ் பெற்ற விவேகானந்தா கல்வி நிலையத்தினர் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள்.

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தமிழில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியை மேற்கொள்ளலாம். "நேர்முகப் பயிற்சியும் உண்டு"

மேலும் தகவல் அறிய ஒரு போஸ்ட் கார்டில் உங்களது விருப்பத்தை எழுதி எங்களுக்கு அனுப்பினால் போதும்!

பயிற்சி பற்றிய தகவல் புத்தகத்தையும், விண்ணப்ப மனுவையும் உடனே உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

***உங்களது முன்னேற்றத்தின் முதல் முயற்சி இன்றே துவங்கட்டும்!***

நீங்கள் கடிதம் எழுத வேண்டிய முகவரி:

## விவேகானந்தா கல்வி நிலையம்

**தபால் பெட்டி எண்: 4986, 9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17.**

# மணல்வெளி மான்கள்

## 23

சைக்கிள் இல்லாமல் கை உடைந்த மாதிரி ஆகிவிட்டது. கிலோ மீட்டர் கணக்கில் நடக்க அலுப்பு. அதுவும் விட்டலாபுரம். அன்னவாசல். பூந்துறை. இப்படிப் பறக்கிற தொழிலில் சைக்கிள் தான் இறக்கை. கேஸ் அது இது என்று இழுத்து விட்டு போலீஸ் சைக்கிளைத் தர எவ்வளவு காலமாகுமோ?

கௌதம் மாத வாடகைக்காக ஒரு சைக்கிள் கேட்கக் குமரேசன் கடைக்குப் போனான். கடை மூடியிருந்தது. வீட்டில் ஏதோ அலுவல் என்று பக்கத்துக் கடைக்காரர் சொன்னார்.

நாளைக்குப் பார்க்கலாம் என்று திரும்பும் போது, இன்ஸ்பெக்டரின் மோட்டார் சைக்கிள் எதிர்வந்தது.

அவனைப் பார்த்ததும் வண்டி நின்றது.

''எங்கே கௌதம்?''

தெருவிளக்கு வெளிச்சம் இருவர் முகத்திலும் விழுந்தது. இன்ஸ்பெக்டரின் பார்வை எவ்வித விரோதமுமின்றித் தனக்குள் நுழைய முயற்சி செய்வதை கௌதம் உணர்ந்தான்.

''குமரேசன் கிட்டேயா?''

''ம்..ம்....''

''கடை மூடியிருக்கே.''

''ம்ம். வீட்டிலே என்னமோ அலுவலாம்.''

''மறுபடியும் எங்கே வீட்டுக்கா?''

''ம்ம்.''

''வீட்டுக்கு வாயேன். கொஞ்ச நாழி பேசிட்டிருப்போம்.''

அது கௌதமுக்குச் சற்று வித்தியாசமாகப் பட்டது. ஏன் இவர் வீட்டுக்குக் கூப்பிடுகிறார்? நட்போடா இல்லை வேறு நோக்கத்தோடா?

அவனது அரைநிமிட யோசனை அவரைக் காத்திருக்கவைத்துவிட்டது.

''வேற வேலையிருந்தா வேண்டாம்!''

இன்ஸ்பெக்டர் குரலில் காயமுற்ற தொனி. கௌதமுக்கு அது உறைத்தது.

''ஒண்ணுமில்லே சார், வர்றேனே.''

''உட்கார் போவோம்.'' அவர் பில்லியன் பக்கம் முகம் காட்டினார்.

''வேண்டாம் சார், நான் நடந்தே வர்றேன்.''

''ஆல்ரைட்.''

அவன் போனபோது கதவு திறந்து புல்லட் மேலே வீட்டில் ஏற்றப்பட்டிருந்தது.

அவன் படியேறி நடைக்குள் நுழைந்த போது, ''கௌதம்?'' என்று தூரத்தில் அவர் குரல் விசாரித்தது. முகம் தெரியவில்லை.

''எஸ் சார்.''

''நாற்காலியிலே உக்காரு. முகம் கழுவி டிரஸ் மாத்திட்டு வந்துடறேன்.'' பாத்ரூமிலிருந்து கதவைத் திறந்து தலை நீட்டிப் பேசினார்.

அவன் நாற்காலியில் பிலோமினாவின் புகைப்படம் தொங்கும் சுவரைப் பார்த்து உட்கார்ந்தான்.

வாழ்க்கையைப் பிரகாசமான நம்பிக்கையோடு, மாசற்ற குதூகலத்தோடு, பிலோமினாவின் கண்கள் போட்டோவில் பார்த்தன.

பத்து நிமிடத்தில் டிரஸ் மாற்றிக் கொண்டு இன்ஸ்பெக்டர் வந்தார். சோப் வாசனையும் பவுடர் வாசனையும் அறையின் சூழலைப் புதுவிதமாய் மாற்றின.

இன்ஸ்பெக்டர் பனியன் லுங்கியோடு நின்றார். உட்காரவில்லை.

''மொட்டை மாடிக்குப் போவோமா?'' என்று கேட்டுக் கொண்டே அவர் நகர்ந்தார். கௌதம் எழுந்தான். அவர் பின்னால் படியேறினான்.

மொட்டை மாடியில் இரண்டு பிரம்பு நாற்காலிகள். ஒன்றில் இன்ஸ்பெக்டர் உட்கார்ந்தார். இன்னொன்றை அவனுக்குக் காட்டினார்.

கண்ணை உறுத்தாத நிலா வெளிச்சம் மாடித் தரையில் பாயாக விரிந்திருந்தது.

''சைக்கிளை உன் கிட்டே ஒப்படைக்கலேண்ணு வருத்தமில்லியே கௌதம்.''

அவன் பதிலளிக்கவில்லை.

''டிபார்ட்மெண்ட் ரூல்ஸ் இருக்கே. தெ ஆர் ஸ்ட்ரேஞ்ச். முன்னே போனாக் கடிக்கும். பின்னே வந்தா உதைக்கும்.''

இன்ஸ்பெக்டர் அவற்றை விலகி நின்று பார்ப்பவர் போல் பேசினார். அந்தக் கனமான குரல் மொட்டை மாடியின் நிலா ஒளி வீசும் வானத்தின் கீழே விசித்திரமாக ஒலித்தது.

''என்னடா ரூல்ஸ் ரூல்ஸ்"ன்னு அதை ஒண்ணை மட்டுமே பேசறேனேன்னு நெனக்கிறியா?''

அவன் பதிலளிக்கவில்லை.

''டிபார்ட்மெண்ட் அப்படிப் பண்ணிடும். ஒரு போலீஸ் ஆபீஸருக்கு வேற வழியில்லே.''

''நீங்க மாறுபட்டவர் சார்!''

''எனக்கும் ஒரு வட்டம் உண்டு. அதை நான் தாண்ட முடியாது.''

அவன் அவர் சொன்னதை நம்ப முயற்சி செய்தான்.

''நீ சுதந்திரமா இருக்கே கௌதம்! உன்னைத் தாக்கினவங்களை நீ விரும்பினா அடையாளம் காட்டலாம். வேண்டாம்னா மறுத்துடலாம். நான் அப்படியில்லே. ஐ ஆம் நாட் ஃப்ரீ... ஐ கான்ட் பி ஃப்ரீ.''

''நீங்க அதை விரும்பலியா?''

''எதை?''

''சுதந்திரத்தை.''

''விரும்பறதனால தான் வழியிலே போன உன்னை இழுத்துட்டு வந்து பேசிட்டிருக்கேன்.''

''விரும்பறீங்க... ஆனா இருக்க முடியலே?''

''யு ஆர் கரெக்ட்.''

''எல்லோருமே அப்படித்தான் சார் இருக்கோம்.''

''ஒரு போலீஸ் ஆபீசருக்கு உண்மை நண்பன் இருக்கவே முடியாது கௌதம்.''

''புரியுது சார்.''

''அதுக்காக அவன் நண்பர்களைத் தேடிக்கிட்டே இருக்கறது நின்னுடுமா?''

''ஒண்ணு சொல்லலாமா?''

''ஓ எஸ்.''

''உங்களுக்கு நீங்களே நண்பனா இருங்களேன்.''

இன்ஸ்பெக்டர் அவன் சொல்வதன் அர்த்தத்தில் மூழ்கி மௌனமானார்.

''வெறுமனே ஒரு போலீஸ் ஆபீசரா இருந்துடுங்க.''

அவர் கண்கள் நிலாவொளியில் மின்னின.

''அப்படீன்னா பதவி உயர்வு, பணம் சேர்க்கறது, வசதியா வாழறது எட்ஸெட்ரா... எட்ஸெட்ரா எல்லாம் அடங்கிடும்.''

இப்போது அவர் மௌனமாயிருந்தார்.

''நீங்க அந்த ரகம் இல்லே.''

''..........''

''ஒரு வேளை அப்படி இல்லாமப்



"ஆனாலும் எங்கம்மாவும் என் மனைவியும் ரொம்ப மோசம்...."
"ஏன் அப்படிச் சொல்றே?"
"பாரேன், அவங்க போடற மாமியார் மருமகள் சண்டையை வேடிக்கை பார்க்கிறவங்ககிட்ட பார்வையாளர் கட்டணம் வேற வசூலிக்கிறாங்க!"

— பிரபாஷ்கரன்.

போயிட்டதுக்காகப் பின்னாடி வருத்தப் பட்டாலும் படுவீங்க."

கௌதம் அவருக்கும் தனக்குமிடையே யிருந்த வரம்புகளைக் கடப்பதை உணர்ந்தான். அதைத் தவிர்க்கும் உத்தேசம் போய் விட்டது.

"கொஞ்சம் மனுஷனாயிருக்க எல்லாருமே முயற்சி பண்ணிட்டிருக்கோம். அதுவே அசாத்தியமா இருக்கு. ஒரு பதவியிலிருந்து முயற்சி பண்றது ரொம்ப அசாத்தியம் தான்."

"உனக்கு எம்மேல ரொம்ப வருத்தம் கௌதம்!"

"இல்லே சார்! நீங்க சொன்ன உங்க வட்டத்திற்குள்ளேயே நீங்க மாறுபட்டிருக்கீங்க. அந்த அளவு எனக்கு சந்தோஷம் தான்."

அவனுக்குப் பிலோமினா ஞாபகம் வந்தது.

"ஒங்களைப் பார்க்கறப்பல்லாம் எனக்கு ஒங்க சிஸ்டர் ஞாபகம் தப்பாம வருது சார்!"

தன்னை அவர் வெறித்துப் பார்ப்பதைக் கவனித்தவாறே கௌதம் தொடர்ந்தான்.

"ஒங்க மாதிரியே அவங்களும் ஒரு சுதந்திர தாகமுள்ளவங்க. டெடிகேடட்."

"கௌதம்... ஷி ஈஸ் அன் ஏஞ்சல்."

"அதை அவங்க புரிஞ்சுகிட்டாங்க. அதான் அந்த வழியை 'சூஸ்' பண்ணிட்டாங்க. அது எல்லாருக்கும் உரிய வழி இல்லே. ப்ரைவேட்... பர்ஸனலி ப்ரைவேட்."

"எனக்கு அதிலே சந்தோஷமில்லே கௌதம்."

"சொந்த வாழ்க்கையைப் பொறுத்த வரை மத்தவங்க சந்தோஷம் முக்கியமே ஆகறதில்லே சார். இப்ப அவங்க சந்தோஷமா இருக்காங்க. எப்பவுமே இப்படியே இருப்பாங்க."

பேச்சு தண்டவாளம் மாறிய உள்ளுணர்வோடு கௌதம் தொடர்ந்தான்.

மொதல்லே பார்த்ததும் எனக்கு அதிர்ச்சியா இருந்தது. அப்புறம் சரியாப் போச்சு. அவங்க சரியாத்தான் தேர்ந்தெடுத்திருப்பாங்க."

அவர் பேசாமலிருந்தார்.

"சந்தோஷம் அவங்கவங்க 'சாய்ஸ்' தானே சார்."

"உன் சாய்ஸ் என்ன கௌதம்?"

"தேடறேன்."

"இன்னுமா?"

"எப்பவுமே தேடறதாக்கூட ஆயிடலாம்."

"வாட் டு யூ மீன்?"

"இப்ப ஆதியின் விடுதலை. அப்புறம் வேற ஒண்ணு. இப்படி தொடர்ச்சியான தேடல்கள். எப்பவுமே தேடறது ஆயிடலாம்லியா?"

"நீ இளைஞன். இளமை அற்புதமானது. வைக்கோல் போரிலே ஊசியைத் தேடி அதை வீணாக்கிட வேண்டாம்."

"இது ஒரு எச்சரிக்கையா சார்?"

"நோ நோ... வெறும் யோசனை... அனுபவ பூர்வமாச் சொல்றேன்."

"அனுபவமா?"

கௌதமுக்கு அப்போதுதான் இன்ஸ்பெக்டருக்கும் ஒரு சொந்த வாழ்வுண்டு என்பது கவனம் வந்தது.

"என்னை விரும்பிய ஒருத்தியை நான் திருமணம் பண்ணிக்கிட்டேன். திருமணத்துக்கு அப்புறம் குழந்தை குட்டியோட செட்டில் ஆகறதுக்கு மேலே வேற ஏதோ இருக்குன்னு தோணிட்டது."

இன்ஸ்பெக்டரின் பேச்சை மொட்டை மாடிச் சுவரிலிருந்து தொப் பென்று குதித்த ஒரு கறுப்புப் பூனை நிறுத்திற்று. அது அவர்கள் இருவரையும் கண்ணிமைக்காமல் எச்சரிக்கையோடு பார்த்தது.

பளபளவென்று அதன் கண்கள் மின்னுவதை இருவரும் கவனித்தனர். அது கௌதமை ஒரு கணம் பார்த்து, ஏதோ நிச்சயத்துக்கு வந்தது போல் நேராக இன்ஸ்பெக்டரின் காலடிக்கு நகர்ந்து வந்தது.

"ரெண்டு பூனை வளர்த்தேன். இன்னொன்று வெள்ளை. ராத்திரி நேரத்திலே போன வாரம் அது லாரியில் மாட்டிக்கிச்சு. அந்த ஜோடி போன வருத்தத்தை இதனால தாங்க முடியலே... மியாவ் மியாவ்னு ராத்திரியும் பகலும் ஓயாம வீட்டிலே அலையும். இதுக்கு ஸ்டேஷன் கூடத் தெரிஞ்சு போச்சு. என்னைத் தேடிக்கிட்டு ஸ்டேஷனுக்கே வர ஆரம்பிச்சுடுச்சு."

கௌதமுக்கு விநோதமாயிருந்தது.

"இதன் துக்கத்தை நான்தான் புரிஞ்சுக்கறேன்னு ஒரு நம்பிக்கை இதுக்கு வந்திருக்கு. அண்ட் ஐ அண்டர்ஸ்டாண்ட் இட்."

கௌதம் அவரை நிமிர்ந்து பார்த்தான்.

"என் வீட்டுக்காரியும் என்கிட்டே என்னென்னமோ எதிர்பார்த்து ஏமாந்து பாய்ஸன் சாப்ட்டுட்டா."

பூனை அவர் மடியிலிருந்து கீழே குதித்தது. எதையோ துரத்திக் கொண்டு மாடிச் சுவரில் ஓடத் தொடங்கிற்று.



நிலவு. வானம். காற்று. மொட்டை மாடி. தூரத்தில் கன்னி மலை. எல்லாம் ஒரு கணம் ஓர் அர்த்த நிட்சண்யம் நன்றியது போல் கௌதம் உணர்ந்தான். அவனுக்குப் பிறர் வாழ்வில் நேர்ந்த பிரதான சோகங்களைக் கேட்கும் போது எப்போதும் இப்படி ஆகி விடும்.

இன்ஸ்பெக்டர் அதைத் தற்செயலாகத் தான் சொன்னார். இப்படிப் பேசும் பிரமேயம் இல்லையென்றால் அதைச் சொல்லியே இருக்க மாட்டார். அந்தத் தொனி அவ்வளவு சாதாரணமாக இருந்தது.

''பூனைகளுக்கு நாய்கள் மாதிரி, குதிரைகள் மாதிரி ஒரு எக்ஸ்ட்ரா பெர்சப்ஷன் உண்டு. நீ கவனிச்சிருக்கியா கௌதம்?''

''நாய்களைக் கவனிச்சிருக்கேன்.''

''பூனை இன்னும் ஷ்நூட். அதுக்கு நம்முடைய துக்கங்கள் கூடத் தெரிஞ்சிருக்கு.''

பாவம் இன்ஸ்பெக்டர் என்று மனசுள் பரிதாபப்பட்டான் கௌதம். இது மிகவும் துர்லபம் என்று சொல்லத் தோன்றியது. நோ. அவசியமில்லை.

''திஸ் ஈஸ் நாட் எ லெக்சர். நான் ஒனக்கு அட்வைஸ் பண்ணலே. எச்சரிக்கை கூடச் செய்யலே. சும்மா ஒரு யோசனை.''

''சொல்லுங்க சார்.''

''இளமையை வீணாக்கிடாதே. ஐ திங்க் யூ லவ் சம்பாடி... டோண்ட் யூ?''

கௌதம் விழிப்புற்றான். தன் சொந்த வாழ்க்கையைப் பற்றித் தெரிந்து கொள்ளுவதில் இவருக்கு என்ன அக்கறை? யார் சொல்லியிருப்பார்கள்? ஓ... பிலோமினா கோட்டையில் நித்யாவையும் அவனையும் ஒன்றாகப் பார்த்தாளே!

அவரது கேள்விக்குப் பதிலளிக்க வேண்டிய அவசியமில்லை.

''ஒரு நல்ல வேலை தேடிக்கோ. விரும்பறவளைக் கல்யாணம் பண்ணிக்கோ. சந்தோஷமா இரு. அவளை முழுக்க முழுக்க சந்தோஷப்படுத்து. ரெஸ்ட் ஈஸ் இர்ரெலவண்ட். மீதியெல்லாம் மித் மாயை.''

அவன் பொறுமையாகக் கேட்பதைப் போல் தலைகுனிந்து கொண்டான்.

''இதே மாதிரிதான் சார் ஆதியும் நெனச்சான்! அதுக்காகத்தான் பணம் சேர்த்தான். இன்னும் ஒரு படி மேலே போயி நெனச்சான். அவங்கம்மா ஊமை. அந்த ஊமைத் தாய் மாதிரிப் பார்த்துக்கற மனைவியைத்தான் தேடினான்.''

இன்ஸ்பெக்டர் கவனித்துக் கேட்கிறாரா என்று உறுதி செய்து கொள்ள அவர் முகத்தைப் பார்த்தான். கவனித்தார்.

''ஒருவேளை மாசிலா கூட அப்படித் தான் நெனச்சுக் கல்யாணம் பண்ணியிருப்பான். ஒரு பொம்பிளை சுகத்தைவிட மண் பெரிசுன்னு அவனுக்குத் தோண ஆரம்பிச்சதுதான் அவன் துரதிர்ஷ்டம்.''

**கௌ**தம் பேசுவதை நிறுத்தினான். கீழே காலிங்பெல் ஒலிக்கும் ஓசை கேட்டது.

''கான்ஸ்டபிள் எடுப்புச் சாப்பாடு கொண்டாந்திருப்பாரு... இரு. இதோ வர்றேன்.''

இன்ஸ்பெக்டர் கதவைத் திறக்கக் கீழிறங்கினார். கறுப்புப் பூனை சுவர் மீது நடந்து வந்தது. அவர் அமர்ந்திருந்த நாற்காலியைப் பார்த்து மெதுவாகக் கத்திற்று. பின்பு திரும்பிப் படியிறங்கியது.

கௌதம் வானத்தை அண்ணாந்து பார்த்தான். மேகக் கறையற்ற தெட்டத் தெளிவான வானம். நிலா அநியாயத்திற்குத் தன்னந் தனியே ஒளி வீசிற்று.

அவன் இன்ஸ்பெக்டரைப் பற்றி நினைத்தான். மனிதர்கள் தூரத்தில், ஒவ்வொரு ஒப்பனையில், ஒவ்வொரு கோணங்களில் தான் கடினமாகத் தென்படுகிறார்கள். நெருக்கத்தில் திரவமாக, மிருதுவாக, முகமூடியிலிருந்து பெற்ற விடுதலையால் பெருமூச்சு விட்டுக் கொண்டுதான் காணப்படுகிறார்கள்.

இளமையைப் பற்றி அவர் சொன்னதெல்லாம் ஒரு கழிவிரக்கம் போல் தொனித்தது. ஆனால் அதில் உள்நோக்கமில்லை. தன்னை மாற்ற முடியாது என்று தெரிந்து கொண்டே அவர் சொல்ல விரும்பியதைத் தெரிவித்திருக்கிறார்.

இன்ஸ்பெக்டர் மாடியேறி வந்தார்.

''இன்னிக்கு என்னோட சாப்பிடு கௌதம்.''

''வேண்டாம் சார். வீட்டிலே காத்திட்டிருப்பாங்க. நான் வரட்டுங்களா?''

''சாப்பிட்டுட்டுப் போகலாமே?''

''தாங்க் யூ ஸார். வேண்டாம்.''

அவன் அவருக்கு வணக்கம் சொல்லி விட்டு விடைபெற்றுத் தெருவில் இறங்கி நடக்கும் போது மனசுக்குள் ஒரு புதுத் தென்பு ஊறியிருப்பதை உணர்ந்தான். இன்ஸ்பெக்டருக்குத் தன்னிடம் மனசை உதறிக் கொட்டத் தோன்றியதனால் பிறந்த தென்பு அது.

(தொடரும்)

மத்யமர்:

# சாட்சி





சரளா நூறு கிராம் கடுகு வாங்க அமீர்பாய் கடைக்குப் போன போது அந்த விபரீதம் நிகழ்ந்தது. அதைப் பற்றிச் சொல்வதற்குமுன் சரளா யார், அந்தப் பேட்டை, சம்பவ வேளை, போன்ற விவரங்களைச் சுருக்கமாகச் சொல்வது உசிதம். சரளா நாராயணனின் மனைவி, நடேசன் தம்பதிகளின் மருமகள், கோபாலுக்கும் ஸ்வேதாவுக்கும் மன்னி. 'சின்னாளி' என்று ஏனோ அழைக்கப்பட்ட மூன்று வயது மகாலட்சுமியின் தாய்; வீட்டில் சகல காரியங்களையும் முகத்தில் சிரிப்பு மாறாமல் செய்யும் பெண் இ ய ந் தி ர ம். அவள் ஒக்கபிலேரியில் விடுமுறை, சினிமா, வெளியே போய் டின்னர், கோடைக்கானல் போன்ற வார்த்தைகள் இல்லவே இல்லை. அனுமார், நவக்கிரகங்கள், பிள்ளையார், சீனிவாசர் என்று பல விக்கிரகங்கள் வீற்றிருக்கும் 'மல்ட்டி பர்ப்பஸ்' கோவிலுக்கு மாமியாருடன் ப்ரதி வெள்ளிக்கிழமை போவாள். அப்போது தான் வெளியுலகக் காற்றைச் சுவாசிக்கச் சந்தர்ப்பம். மற்ற தினங்களில் அவள் சுதந்திரம் அமீர்பாய் கடையைத் தாண்டாது. ரேடியோ கேட்க, டி. வி. பார்க்க, கல்கி படிக்க, இதற்கெல்லாம் அவகாசம் கிடையாது. யாரையும் எதிர்த்துப் பேச மாட்டாள். வேலைக்காரி கூட, "அப்படியே இந்த துணிங்களையும் சோப்பில ஊறப் போட்டு அலசி வெச்சிருங்கம்மா" என்றால், "ஆகட்டும் கமலா" என்பாள்.

அமீர்பாய் கடை தெருக்கோடியில்தான் இருந்தது. அதனருகே ஒரு பேக்கரி, ஒரு எலக்ட்ரிக் ஷாப், ஒரு பெட்டிக்கடை. காலனி புதுசு. ரயில் பாதையை ஒட்டின தனியார் வீடுகள். தூரத்துக்கு ஒன்றும் திசைக்கு ஒன்றுமாக முளைத்துக் கொண்டிருக்கும் குடியிருப்பு. குடி தண்ணீர்க் குழாய், தெருவிளக்கு போன்ற முனிசிபல் கடாட்சங்கள் கிடையாது. அடிக்கடி பக்கத்து காலனிக்குப் பாறாங்கல் அடிக்கும்மஞ்சள் நிற லாரிகள் தடதடத்துக் கொண்டு சென்றபின், புழுதிவால் அடங்க அஞ்சு நிமிஷம் ஆகும். ராத்திரி பக்கத்து வயல் காட்டிலிருந்து தவளைகள் சப்தமும் டெண்ட் கொட்டகை சினிமா வசனங்களும் கேட்கும்.

சரளா கடுகு வாங்கச் சென்றது என்னவோ பகலில்தான். "வாங்க சரளாம்மா, என்ன கண்லயே காண்றதில்லை?"

"வீட்டிலே ரொம்ப வேலை அமீர்பாய்."

அப்போது இரண்டு இளைஞர்கள் மோட்டார் சைக்கிளில் வந்து இறங்கி பெட்டிக்கடைப்பக்கம் போனார்கள். சரளா நிற்பதை அவர்கள் கவனிக்கவில்லை. நெற்றியில் சிவப்பு கர்ச்சீப் சுற்றியிருந்தவனை சரளா பக்கத்து வீட்டில் அடிக்கடி பார்த்திருக்கிறாள். அவன் பெயர் கிருஷ்ணா. உடன் வந்தவனும் தெரிந்த பையனாகத் தோன்றினான். சீனுவோ என்னவோ பேர். இருவரும் நேராக வந்து பெட்டிக்கடையில் வீற்றிருந்த வாசுவைப் பிடித்து "ஏண்டா ரதி கிட்ட வம்பு பண்ணுவியா?" என்று சொல்லி ஒருவன் வாசுவைப் பிடித்துக் கொள்ள, மற்றவன் கத்தியை எடுத்து விலாவுக்குக் கீழே நடு மத்தியில் 'சத்தக்' என்று குத்திவிட்டான்.

வாசு அப்படியே வெற்றிலைகள் மிதந்த

**சுஜாதா**



மரத்தொட்டியில் ''அய்யோ!'' என்று கவிழ, அவர்கள் மறுபடி அவனை நிறுத்தி வைத்து விலாவில் பக்கவாட்டில் குத்தினார்கள்.

சரளாவுக்கு ஆரம்பத்தில் அந்தக் காட்சியின் பயங்கரம் உரைக்கவில்லை. அவர்கள் குத்தி முடித்துச் சட்டென்று மோட்டார் சைக்கிளில் பாய்ந்து புழுதியுடன் புறப்பட்ட போதுதான், ''அய்யோ!'' என்று கத்தினாள்.

''என்னம்மா'' என்றார் அமீர்பாய். அவர் கடுகு கட்டுவதில் கவனமாக இருந்ததால் இந்தச் சம்பவத்தைக் கவனிக்கவே இல்லை.

''வாசுவை அந்தப் பையங்க குத்திட்டுப் போறாங்க.''

வாசு தடுமாறித் தடுமாறி முன்பக்கம் குனிந்து கடை வாசலில் விழுந்தான். அவன் வாய் பிளந்து சொல்லவோ சுவாசிக்கவோ முயற்சி செய்தது. கை ஒரு மாதிரி வலிப்பு வந்தது போல் வெட்டிவிட்டுச் சட்டென்று நின்று போக —

சத்தியமாக வாசு செத்துப் போய்விட்டான்.

சரளாவுக்கு உடம்பெல்லாம் பதற்றம் வந்து, ''என்ன அநியாயம்! அச்சச்சோ! என்ன அநியாயம்?'' என்று புடைவைத் தலைப்பால் வாயைப் பொத்திக் கொண்டு பின் வாங்கினாள்.

மெல்ல ஜனங்கள் கீழே கிடந்த வாசுவை அணுக, அமீர்பாய் கடையிலிருந்து பாய்ந்து ஓட, யாரோ விசிறி, யாரோ பிளாஸ்டிக்

## மத்யமர்
## — வாசகர் விமர்சனம்

'மத்யமர்' என்ற வரிசையில் சுஜாதா எழுதி வரும் சிறுகதைகளுக்கான வாசகர் விமர்சனங்களை நீங்கள் படித்து வருகிறீர்களல்லவா! அவற்றைப் போலவே சுருக்கமாக நடை, கரு, பாத்திரப் படைப்பு போன்றவற்றுள் ஏதேனும் ஒன்றை மட்டும் விமர்சித்து 'சாட்சி' என்ற இச்சிறுகதைக்கான உங்கள் விமர்சனங்களை அஞ்சலட்டையில் எழுதியனுப்புங்கள். குறையிருந்தாலும் சுட்டிக் காட்டலாம்.

பிரசுரமாகும் விமர்சனங்கள் ஒவ்வொன்றுக்கும் ரூ. 25 பரிசு. சிறந்த விமர்சனத்துக்கு ரூ. 50 சிறப்புப் பரிசு!

உங்கள் விமர்சனங்கள் கல்கி அலுவலகத்துக்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 19.6.90.

— ஆசிரியர்.

பக்கெட்டில் தண்ணீர், என்று பல திசைகளிலிருந்தும் அனுக. சரளா — அந்தச் சம்பவத்தைக் கண்கூடாகப் பார்த்த ஒரே ஒரு சாட்சி. தன் வீட்டை நோக்கி ஓடினாள்.

"என்ன சரளா... என்ன ஆச்சு! ஏன் இப்படி ஓடி வர்றே?"

"அம்மா, கடை வாசல்ல... கடை வாசல்ல..." அம்மா என்றுதான் மாமியாரைக் கூப்பிடுவாள்.

"என்ன கடை வாசல்ல...?"

"வாசுவை... வாசுவை... அந்த ரெண்டு பையன்களும் குத்திட்டா. பிராணன் போயிடுத்து. ரொம்ப ரத்தம்!"

"சீக்கிரம் வா. உள்ளே வந்துடு."

மாமியார் அத்தனை கதவுகளையும் உள்பக்கம் தாளிட்டு விட்டாள்.

சரளா பாத்ரூமுக்குப் போய் முகத்தில் தண்ணீர் விட்டு அலம்பிக் கொண்டாள். அவள் கைகள் நடுங்க, நாக்கு உலர்ந்திருந்தது. ஒரு நிமிஷம் மார்பைப் பிடித்துக் கொண்டு நீண்ட மூச்சு விட்டாள்.

பாத்ரூம் சன்னல் வழியே தெரு தெரிந்தது. இப்போது வாசுவைச் சுற்றிப் பல பேர் கூடியிருக்க, பேருக்குப் பேர் நாட்டாண்மை செய்து கொண்டிருந்தார்கள்.

கூடத்துக்கு வந்து தலைப்பால் துடைத்துக் கொண்டு வந்தபோது, மாமியார் சன்னலை லேசாகத் திறந்து பார்த்துக் கொண்டிருந்தாள்.

"உயிர் போயிடுத்தா?"

"அப்படித்தான் தோண்றது."

"நீ போய் எப்படி மாட்டிண்டே அங்கே?"

"கடுகு வாங்க நீங்கதானே அனுப்பிச்சிங்கம்மா?"

"பட்டப் பகல்ல தெருவில நடக்கறது பாரு! — போலீஸ் வந்தாச்சு!"

"என்ன பண்ணுவா?"

"ஆஸ்பத்திரிக்கு எடுத்துண்டு போய் 'போஸ்ட்மார்டம்' பண்ணுவா. சரளா நீ உள்ளே போய்டு!"

அந்தப் போலீஸ் இன்ஸ்பெக்டர் அமீர் பாயிடம் விசாரித்துக் கொண்டிருந்தார். அவர் சரளாவின் வீட்டைக் காண்பித்தார். போலீஸ் அதிகாரி தலையாட்டிவிட்டுச் சரளாவின் வீட்டை நோக்கி நடந்தார்.

"அய்யோ, இங்க வர்றான்! சரளா, நீ போய் சமையல் உள்ளே இரு!"

அவர் தன்னுடைய பிரம்பால் வாசல் கதவைத் தட்ட, மாமியார், "யாரு?" என்றாள்.

"போலீஸ். திறங்க கதவை!"

"நீ போடி உள்ளே! என்ன வேணும்?"

"கதவைத் திறங்க முதல்ல."

"ஆத்தில புருஷான் யாரும் இல்லை!"

"திறங்க!"

மாமியார் பதற்றத்துடன், "எங்க போயிடுத்து இந்தப் பிராமணன்?" என்று கதவைத் திறக்க, அந்த இளம் இன்ஸ்பெக்டர் நிற்பதைக் கதவிடுக்கில் பார்த்தான்.

"சரளான்னு யாருங்க இங்கே?"

"ஏன்?"

"அந்தப் பொட்டிக் கடையாண்டை ஒரு மர்டர் ஆயிடுச்சு. அந்தம்மா பார்த்தாங்களாம். முஸ்லிம் கடைக்காரர் சொன்னார்."

"இல்லையே, யாரும் பார்க்கலை."

"நீங்க சரளாங்கறவங்களைக் கூப்பிடறீங்களா?"

இதற்குள் நடேசன் வந்து விட்டார். "யாரு?" என்றார்.

"ஸார் என் பேர் இன்ஸ்பெக்டர் ரவிராஜ். சரளாங்கறவங்களை விசாரிக்கணும்."

"என்ன விஷயமா?"

"ஏங்க, தெருவே அல்லோலப்படுது. என்ன விஷயம்னு கேக்கறீங்களே?"

"பொட்டிக்கடை வாசுவை யாரோ அநியாயமாக் குத்திட்டான்னா."

"அய்யோ."

"அதுக்கு சரளாவை விசாரிக்கணுமாம்."

"சரளாவா? அவளுக்கு என்ன சம்பந்தம்?"

"ப்ச்! அந்தம்மா ஒருத்தர்தான் பார்த்தாங்களாம். பாய் கடைல சொன்னாங்க!"

நடேசன் தீர்மானமாக, "அதெல்லாம் அவ பார்த்திருக்க மாட்டா! அவளால எந்தச் சாட்சியும் சொல்ல முடியாது. ரொம்ப பயந்த பொண்ணு!"

"ஸார் சம்பவத்தைப் பார்த்தவங்க அவங்க ஒருத்தர்தான்... அதான் அவங்

களை அடையாளம் காட்ட முடியுமான்னு கேட்கணும்.''

நடேசன் தீவிரமாக மறுக்க, ''என்னடா ரோதனையாப் போச்சு...! ஒண்ணு செய்யுங்க. அரை மணியில் திரும்பி வர்றேன். அதுக்குள்ள தீர்மானிச்சுக்குங்க. அந்தம் மாவை... இல்லைன்னா கோர்ட் ஆர்டர் வாங்கி விட்னஸாக் கூப்பிட வேண்டி வரும். எனக்கு நிறைய ஜோலி கிடக்குது. உங்ககிட்ட மன்றாட முடியாது. அரை மணி விட்டு வர்றேன்!''

அவர் போனதும் நடேசன் ஸ்வேதாவைக் கூப்பிட்டு முதல்ல அண்ணாவை உடனே வரச் சொல்லு! அவனுக்குத்தான் ரூல்ஸ் தெரியும். சரளா எங்கே?''

''சமையல் உள்ளே ஒளிஞ்சுகிண்டு இருக்கா!''

''சரளா வெளியில வாம்மா. பயப்படாதே. உன் இஷ்டம் இல்லாம யாரும் எதுவும் செய்ய முடியாது!''

சரளா தயக்கமாக வெளியே வந்தாள்.

''நீ எதுவும் பார்க்கலைதானே?''

''பார்த்தேன் அப்பா!''

''என்ன பார்த்தே?''

''வாசுவை அவங்க ரெண்டு பேரும் கத்தியால குத்தினதை!''

''அவங்கன்னா?''

''பக்கத்து வீட்டுல மோட்டார் சைக்கிள்ள வருவான் பாருங்கோ... கிருஷ்ணான்னு அவனும், அவன் சினேகிதனும்.''

''அய்யோ அந்த ரவுடியா? நிச்சயமாத் தெரியுமா?''

''அவன்தான் மாமா.''

நடேசன் கவலையுடன், ''எங்க இந்த ராஸ்கல் கோபு?''

கிருஷ்ணகோபால் உள்ளே வந்து, செருப்பை உதறிப் போட்டு: ''வாசு க்ளோஸ்! குடல் வெளில வந்துடுத்து!''

''சத்தம் போடாதே! மெள்ளப் பேசு!''

''மன்னி ஏன் பேயறைஞ்சா மாதிரி நிக்கறேள்?''

''பார்த்துட்டாப்பா!''

''பார்த்துட்டியா?''

''கோபு, கிருஷ்ணன்னு பக்கத்தாத்துக்கு மோட்டார் சைக்கிள்ள வருவான் பாரு... அவன்தான்.''

''நிச்சயமாத் தெரியுமா?''

''ஆமாம்!''

கோபு குரலைத் தாழ்த்தி, ''எங்கேயாவது வெளியில சொல்லி வைக்காதே. பெரிய ரௌடி அவன். நம்மையே குத்த வந்துடுவான். பாரதின்னு ஒரு பெண்ணை இவன் சைஸ் பண்ணி வெச்சிருந்தான். அவ வாசுவைத்தான் பண்ணிப்பேன்னு...''

''ரெட்டைப் பின்னல் பின்னிண்டு கறுப்பா?''

''ஆமா, அதான்!''

''அதுக்குப் போயி இத்தனை சண்டையா?''

''மன்னி, கிருஷ்ணாதான் செய்தான்னு மூச்சுக் கூட விடாதே. அவன் பயங்கர ரௌடி. தென்னந்தோப்புல ரெண்டு பேரைப் புதைச்சிருக்கான்!''

''போலீஸ்ல அரை மணி கழிச்சு விசாரிக்க வரப் போறா!''

''பார்க்கவே இல்லை. ஒண்ணுமே தெரியாதுன்னு சொல்லிடு! இல்லைன்னா ரொம்ப ப்ராப்ளமாயிடும். நம்ம எல்லாருக்கும் டேஞ்சர்.''

''எதுக்கும் நாராயணன் வரட்டும். நீ உள்ளே போ சரளா.''

நாராயணனுக்கு ஃபாக்டரிக்கு போன் செய்ததில் பதினைந்து நிமிஷத்தில் வந்துவிட்டான். எல்லோரும் கூடத்தில் இதை விவாதித்துக் கொண்டிருந்ததை மௌனமாக நடுக்கத்துடன் சமையல் அறையிலிருந்து கேட்டுக் கொண்டிருந்தாள். சின்னாளி புடைவைத் தலைப்பை விலக்கி இன்னும் பால் சாப்பிட்டுக் கொண்டிருந்தது.

''நிச்சயமாப் பார்த்தாளாமா?''

''அப்படித்தான் சொல்றாப்பா! கிருஷ்ணாங்கறா!''

''அது அப்பாவி! யாரைப் பார்த்தாலும் கிருஷ்ணாங்கும்!''

# பாவார் சொன்ன பதில்!

**ஆஸ்திரேலியாவுக்குப் புறப்பட்ட போது மகாராஷ்டிர முதலமைச்சர் பாவார் செய்தியாளர்களிடம் தம் பொறுப்புக்களை இரு மூத்த அமைச்சர்களிடம் பிரித்துக் கொடுத்துள்ளதாக அறிவித்தார். ''இலாக்காக்கள் விஷயம் சரி. ஆனால் உங்கள் 'அரசியலை' யார் கவனிப்பார்கள்?'' என்று பத்திரிகையாளர்கள் கேட்டபோது, 'ஆஸ்திரேலியத் தொலைபேசி நிறுவனம் நன்கு செயல்படுவதாகக் கேள்வி'' என்று மட்டும் பதிலிறுத்தார் பாவார்!**



— ராஜீவி நரசிம்மன்.

"அண்ணா, மன்னிக்கு நல்ல ஆப்ஸர்வேஷன். இதிலெல்லாம் தப்புப் பண்ண மாட்டா!"

"இப்ப கிருஷ்ணான்னு சாட்சி சொன்னா என்ன ஆகும்?"

"அரெஸ்ட் பண்ணுவா. பெயில்ல வந்துடுவான் வெளியில. வந்த கையோட இங்கே வந்துடுவான்!"

"எதுக்குக் கோபு?"

"எதுக்கா? பயமுறுத்த. தீர்த்துக்கட்ட. அவன் கூட வம்பே வெச்சுக்கக் கூடாது. கொலைபாதகன் அண்ணா. நீ மன்னிகிட்டத் தீர்மானமாச் சொல்லிடு; கிருஷ்ணா பேச்சே எடுக்கக் கூடாதுன்னு! ஏற்கெனவே பயந்தாங்கொள்ளி... இப்பவே ஜன்னி பிறந்த மாதிரி ஆயிட்டா."

"வேற யாரும் பார்க்கலையாமா?"

"மத்தியான வேளை. யாரும் இல்லை. பார்த்திருந்தாலும் சாட்சி சொல்ல மாட்டா. அமீர்பாய் பேசாம சரளாவைக் காட்டிட்டான்!"

"நாம இதில மாட்டிக்கவே வேண்டாம் அண்ணா!"

"அந்த இன்ஸ்பெக்டருக்கு என்ன உரிமை இருக்கு? ஆஸ் எ ஸிட்டிஸன், நம்மாத்துல எப்படி நுழையலாம்?"

"போயிட்டுப் போறது. போலீஸ்கூட கன்ஃப்ரன்டேஷன் இல்லாம பார்த்துக்கலாம்."

"எப்படி?"

"எங்களுக்கு ஒண்ணுமே தெரியாது. எதையும் பார்க்கலை. பேசாம மளிகைக் கடைல கடுகு வாங்கிண்டிருந்தேன்னு சொல்லிடறது."

"அதுவும் நல்ல உபாயம்தான். இல்லை, அங்கே போகவே இல்லைன்னு கூடச் சொல்லிடலாம்."

"அது வேண்டாம். அமீர்பாய் ஏறுமாறா ஏதாவது சொல்லியிருப்பான்."

நாராயணன், "சரளா..." என்று அவளை அழைக்க, "பார்த்துப் பேசு. அதட்டாதே. ரொம்பப் பயந்துண்டு இருக்கா!"

சரளா குழந்தையுடன் வெளியே வர, நாராயணன் அவளைத் தோளோடு அணைத்து, "பாரும்மா சரளா... நீ பார்த்தது பெரிய அதிர்ச்சிதான்... ஏதோ விதி! ஆனால் அந்தக் கிருஷ்ணாதான் செய்தான்னு போலீஸ்கிட்டச் சொல்றதில நமக்கு ரொம்பச் சிக்கல் ஏற்படும். நீதான் பார்த்தியோல்லியோ? கொலைக்கும் அஞ்ச மாட்டான். சாட்சி சொன்னா உன்னைத் துரத்திண்டு வந்துடுவான். அட் தி ஸேம் டைம் போலீஸ்கிட்ட நாம சாட்சி சொல்ல மாட்டோம்னு முரண்டு பண்றதும் நல்லதில்லை. என்ன நான் சொல்றது?"

"புரியறது" என்று தலையாட்டினாள்.

"அந்த இன்ஸ்பெக்டர் வந்து விசாரிப்பார். அப்ப என்ன சொல்லணும்?"

"நீங்களே சொல்லிடுங்களேன்."

"உன்னைத்தான் பதில் சொல்லச் சொல்வார்!"

"எனக்கு ஒண்ணுமே தெரியாது. நான் எதையும் பார்க்கலைன்னு சொல்லிடறேன். நமக்கு எதுக்கு வம்பு?"

"சபாஷ்! உனக்கும் புத்தி இருக்கு. நம்ம சரளாவை என்னங்கறே அம்மா?"

"மன்னி, அந்தக் கிருஷ்ணாதானா? நேரில் பார்த்தியா?"

"ஆமாம், ஸ்வேதா!"

"ஸ்வேதா, நீ உள்ளே போடி. அவளைப் போட்டுக் குழப்ப வேண்டாம்."

"குழப்பமே வேண்டாம். தெளிவா இருக்கு. நான் எதுவும் பார்க்கலைன்னு சொல்லிடப் போறேன்."

"அந்த இன்ஸ்பெக்டரைப் பார்த்துப் பயந்துக்காதே!"

"நான் உங்களைப் பார்த்துண்டு சொல்லிடறேன்."

"உன்னை போலீஸ் எதுவும் பண்ண முடியாது தெரியுமா?"

"அப்படியா?"

"பயப்படவே வேண்டாம்!"

"பயம் இல்லைன்னா... ஒரு மாதிரி திகில்! பார்த்ததிலிருந்து ஒரு மாதிரி நடுக்கம்... சாப்பாடு வேண்டியிருக்கலை. ஜுரம் மாதிரி... அத்தனை ரத்தம் அத்தனை கிட்டத்தில்..."

"இந்த ஏரியாவே வேண்டாம். வீட்டை வித்துட்டு வேற எடத்துக்குப் போயிடலாம்."

"நேராக் குத்திட்டானா?" என்றான் கோபு.

"கோபு, நீ சும்மாயிரு!" என்று நாராயணன் அதட்டி, மஹாலட்சுமியை வாங்கிக் கொள்ள முயற்சி செய்தான். அது மறுத்தது.

"நீ உள்ளே போ."

சரளா உள்ளே செல்ல, அதற்குள் வாசலில் சுறுசுறுப்பாகக் கதவைப் பிரம்பால் தட்டும் சப்தம் கேட்டது. இன்ஸ்பெக்டர் உள்ளே நுழைந்து, "என்ன, தீர்மானிச்சிங்களா? எங்கே சரளா? அவங்களைக் கூப்பிடுங்க! பாடாவதிப்பா கேஸ்! ஒரு கிளாஸ் வாட்டர் தர்றீங்களா? தொப்பியைத் திறந்து தலையைத் துடைத்துக் கொண்டு நாற்காலியில் உட்கார்ந்தார்.



வடபழனி தெரியும்; தென் பழனி? 'முருகன் ஆண்டிக் கோலத்தில் இருக்கும் பழனிதான்' என்பீர்கள். ஆனால் கமுதி மக்கள் அந்த ஊருக்குப் பதினைந்து கி. மீ. தூரத்தில் உள்ள குமரய்யா கோயில் இருக்கும் ஊரையே தென் பழனி என்றழைக்கின்றனர்!

— ஆர். ஆர். பூபதி

''ஐம் நாராயண், சரளாவின் ஹஸ் பெண்ட்!''

''அவங்களைக் கூப்பிடுங்க முதல்ல.''

''எதுக்கு?''

''எதுக்கா? அவங்க ஒருத்தர்தாங்க இந்தச் சம்பவத்தைப் பார்த்திருக்காங்க. அவங்க சாட்சியை வெச்சுக்கிட்டுத்தான் அந்த ரௌடிங்களை அரெஸ்ட் பண்ணணும்... உங்க பக்கத்து வீடுதானாமே! கிருஷ்ணான்னு ஒருத்தன்... ஏதோ பொம்பளை விஷயம்... ம்... சீக்கிரம் கூப்பிடுங்க. கான்ஸ்டபிள், அந்த பாரதிங்கற பொண்ணு எங்கேன்னு விசாரிங்க.''

''இன்ஸ்பெக்டர், என் மனைவி எதையும் பார்க்கலை. எதுவுமே பார்க்கலை...''

''அதை அவங்க சொல்லட்டும்!''

''அவ கொஞ்சம் பயந்த சுபாவம்!''

''நான் என்ன கடிச்சுச் சாப்பிடவா போறேன்? கூப்பிடுங்க! என்ன இது?''

நாராயணன் தன் தந்தையைப் பார்க்க, ''ஸ்வேதா, போய் மன்னியைக் கூட்டிண்டு வா.''

ஸ்வேதா சமையலறைக்கு வந்து, ''மன்னி... கூப்பிடறா.''

''ஸ்வேதா எனக்குக் கைநடுங்கறது.''

''பயப்படாதீங்க மன்னி. நாங்கள்ளாம் இருக்கோம். எனக்கு ஒண்ணுமே தெரியாதுன்னு சொல்லிடுங்க. அவ்வளவுதான். மேல கேக்க மாட்டா.''

''துப்பாக்கி வெச்சுண்டிருக்காரா?''

''ப்ச் ஒண்ணும் ஆகாது. வாங்க!''

சரளா மெல்ல வெளிப்பட்டு ஹாலுக்குள் நுழைய, அங்கே மௌனம் நிலவியது. இன்ஸ்பெக்டர் ரவிராஜ் எழுந்து, ''வாங்கம்மா. உங்களைத்தான் எதிர்பார்த்துக்கிட்டு இருக்கோம். உங்க சாட்சியை வெச்சுக்கிட்டுத்தான் மேற்கொண்டு அரெஸ்ட் காரியம் நடக்கணும். நான் கேக்கற கேள்விக்கு உண்மையாப் பதில் சொல்லுங்க. அந்த அமீர் பாய் கடைல நின்னுக்கிட்டு இருந்த போது என்ன பார்த்தீங்க?'' என்றார்.

சரளா பயத்துடன் நாராயணனைப் பார்த்தாள்.

அவன், ''பயப்படாதே. அவர் ஒண்ணும் பண்ண மாட்டார். ஏதாவது பார்த்திருந்தாத்தானே... பிரச்னை?''

இடுப்பில் குழந்தையுடன் சரளா மெல்லப் பேசினாள். ''அமீர்பாய் கடைல கடுகு வாங்கப் போன போது, பக்கத்து வீட்டுக்குக் கிருஷ்ணான்னு ஒருத்தன் அடிக்கடி வருவான். அவனும், அவன்கூட இன்னொருத்தன் வருவான். அவன் பேரு சீனுவோ என்னவோ... ரெண்டு பேரும் மோட்டார் சைக்கிள்ல வந்தாங்க. பொட்டிக்கடை வாசுகிட்ட, ''ஏண்டா ரதிகிட்ட வம்பு பண்ணுவியான்னு சொல்லிட்டுக் கத்தி எடுத்து, ஒருத்தன் பிடிச்சுக்க, மத்தவன் விலாவிலயும் வயித்திலயும் குத்தினான். இதுதான் நான் பார்த்தேன்,'' என்றாள்.

# பொன்னியின் செல்வன்

மணியம்

அத்தியாயம் 84

## பட்டாபிஷேகப் பரிசு

சீனத்து வர்த்தகர்கள் இருவரும் தலையில் பெரிய பெரிய தலைப்பாகைகளுடனும் முகத்தில் அடர்த்தியாக வளர்ந்திருந்த தாடி மீசைகளுடனும் காட்சி அளித்தார்கள். அரண்மனை மேன்மாடத்தில் அச்சமயம் எரிந்து கொண்டிருந்த மங்கலான தீபத்தின் ஒளியில் அவர்களுடைய முகத் தோற்றங்கள் தெளிவாகப் புலப்படவில்லை. அவர்கள் என்ன பிராயத்தினர் என்பதைக் கூடத் தெரிந்து கொள்ள முடியவில்லை.

குந்தவையின் உள்ளத்தில் தோன்றியிருந்த ஐயங்கள் மேலும் வலுப்பட்டன. அறிவில் மிக்க அம்மாதரசி, "பட்டுப் பட்டாடைகளைப் பார்ப்பதற்கு இந்த வெளிச்சம் போதாது. பெரிய தீவர்த்தி ஏற்றிக் கொண்டு வா!" என்று அவ்வர்த்தகர்களை அழைத்து வந்த சேவகனுக்குக் கட்டளையிட்டாள்.

"நான் சென்று நல்ல விளக்கு அனுப்புகிறேன்!" என்று கூறிவிட்டு மதுராந்தகத் தேவர் அவ்விடத்திலிருந்து அகன்றார். அவருடன் செம்பியன் மாதேவியும் சென்றார்.

அவர்கள் சென்ற பின்னர் குந்தவை சீன வர்த்தகர்களை நோக்கி, "ஐயா! உங்களுக்கு ஏன் இத்தனை அவசரம்? உங்கள் சரக்குகளை நாளை பகல் வேளையில் கொண்டு வந்து காண்பிக்கக் கூடாதா? இரவுக்கிரவே வந்தீர்களே?" என்றாள்.

"இளவரசிமார்களே! மன்னிக்க வேண்டும்! நாங்கள் தஞ்சைக்கு வந்து பல தினங்கள் ஆயின. எவ்வளவோ பிரயத்தனம் செய்தும் அரண்மனைக்குள் வந்து தங்களைப் பார்க்க முடியவில்லை. நாளை மறுதினம் நாகைப்பட்டினத்திலிருந்து நாவாய் புறப்படுகிறது. அதில் நாங்களும் புறப்பட வேண்டும். அதனாலேதான் அவசரப்பட்டோம்!" என்று சீன வர்த்தகர்களில் ஒருவன் சொன்னான்.

அவனுடைய குரல் சிறிது விசித்திரமாக இருந்தாலும் அவன் பேசிய தமிழ் நன்றாக இருந்ததைக் குறித்து அங்கிருந்தவர்கள் அதிசயப்பட்டார்கள்.

"சீன வர்த்தகரே! உமக்குத் தமிழ் மொழி மிக நன்றாக வருகிறதே!" என்றாள் குந்தவை.

"நான் இச்சோழ நாட்டுக்கு வியாபார நிமித்தமாக வந்து தங்கிச் சில காலம் ஆயிற்று. அதனால் தமிழ் பேசச் சிறிது கற்றுக் கொண்டேன். தமிழும் தமிழ்நாடும் எனக்குப் பிடித்திருக்கின்றன" என்றான் அவ்வர்த்தகன்.

"பின், ஏன், இப்போது உங்கள் நாட்டுக்குப் புறப்பட அவசரப்படுகிறீர்கள்? பட்டாபிஷேகம் வரையிலாவது இருந்து விட்டுப் போகக் கூடாதா? அவ்வளவு அவசரம் என்ன?"

"நாளை மறுநாள் புறப்படும் கப்பல் தவறி விட்டால், அப்புறம் எப்போது கப்பல் கிளம்புமோ தெரியாது. முன் போலவெல்லாம் இப்போது அடிக்கடி நாகையிலிருந்து கப்பல்கள் புறப்படுவதில்லை."

"அது எதனால்?"

"தங்களுக்கு அதன் காரணம் தெரியாதா, தேவி! கடற்பிரயாணம் முன் போல இப்போது சுலபமாயில்லை; பத்திரமாகவும்

இல்லை. கடற்கொள்ளைக்காரர்கள் அதிகமாகிவிட்டார்கள். அரபு நாட்டிலிருந்து ஆவேச வெறி கொண்ட வீரர்கள் கப்பல்களில் ஏறி மேலைக் கடல்களிலும் கீழைக் கடல்களிலும் எங்கெங்கும் சஞ்சரித்து வருகிறார்கள். கடற்கரையோரங்களிலும் துறைமுகங்களின் சமீபத்திலும்கூட அவர்கள் வந்து காத்திருக்கிறார்கள். வர்த்தகக் கப்பல்களைக் கண்டதும் நெருங்கி வந்து பாய்கிறார்கள். மூர்க்காவேசத்துடன் போர் செய்து கப்பல்களில் உள்ளவர்களையெல்லாம் கொன்று, பொருள்களையும் கொள்ளை கொண்டு போகிறார்கள். இது காரணமாக, இப்போதெல்லாம் வர்த்தகக் கப்பல்கள் தனித்தனியாகக்கிளம்பிச் செல்ல இயலுவதில்லை. பத்துக் கப்பல்கள், இருபது கப்பல்கள் சேர்ந்து புறப்பட வேண்டியிருக்கிறது. அவ்வாறு நாளை மறுநாள் புறப்படும் கப்பல்கள் போய் விட்டால், மறுபடி எத்தனை காலம் காத்திருக்க வேண்டுமோ, தெரியாது. தேவிமார்களே! பெரிய மனசு செய்து நாங்கள் கொண்டு வந்திருக்கும் பட்டுப் பட்டாடைகளைப் பாருங்கள்!''



வ்வாறு சொல்லிக்கொண்டே அச் சீன வர்த்தகன் தான் கொண்டு வந்திருந்த மூட்டையைப் பிரிக்கத் தொடங்கினான். அம்மாதிரியே இன்னொருவனும் மூட்டையை அவிழ்த்தான்.

''வர்த்தகர்களே! இப்போது உங்கள் கடையை விரிப்பதில் பயனில்லை. உங்கள் பட்டாடைகளின் தரத்தை இரவு நேரத்தில் பார்த்து நன்கு தெரிந்து கொள்ள முடியாது. உங்களிடம் பட்டாடைகள் வாங்கினால் விலை கொடுப்பதற்கு வேண்டிய பொருளும் இங்கே நாங்கள் கொண்டு வந்திருக்கவில்லை!'' என்றாள் இளையபிராட்டி.

முதலில் பேசிய வர்த்தகன் உடனே மிக்க வியப்படைந்தவனைப் போல் எழுந்து நின்று கரங்களை விரித்துக் குவித்து விட்டு, ''இளவரசி! தங்களிடம் நாங்கள் விலை கூறிப் பெறுவோமா? நல்ல வார்த்தை சொன்னீர்கள்! தாங்கள் இந்தப் பட்டாடைகளை ஏற்று அணிந்து கொள்ள மனமுவந்தால், அதுவே நாங்கள் முன் ஜன்மங்களில் செய்த தவத்தின் பயன் என்று எண்ணி மகிழ மாட்டோமா? விலை கூறி விற்பதற்காக நாங்கள் இந்தச் சரக்குகளைக் கொண்டு வரவில்லை! பட்டாபிஷேகப் பரிசுகளாகக் கொண்டு வந்தோம்!'' என்றான்.

''அப்படியானால், நீங்கள் தவறான இடந் தேடி வந்தீர்கள். இங்கேயுள்ள எங்களில் யாருக்கும் பட்டாபிஷேகம் இல்லை. முடிசூட்டிக் கொள்ளப் போகிறவர் இளவரசர் பொன்னியின் செல்வர். அவரைத் தேடிக் கொண்டு போய் உங்கள் பரிசுகளைக் கொடுங்கள்!''

''இல்லை, தேவி! சரியான இடந் தேடித் தான் நாங்கள் வந்துள்ளோம். எதற்கேனும் பொன்னியின் செல்வரின் தயவைப் பெற வேண்டுமானால், முதலில் இளையபிராட்டி குந்தவை தேவியின் தயவைப் பெறுவதுதான் அதற்கு உபாயம் என்று எல்லாரும் சொல்லுகிறார்கள்!'' என்றான் சீன வர்த்தகன்.



தைக் கேட்டு அங்கிருந்த பெண்ணரசிகள் அனைவரும் நகைத்தார்கள்.

''எல்லாரும் என்றால் யார்? அவ்விதம் எங்கே யார் பேசியதை நீங்கள் கேள்விப்பட்டீர்கள்?''

''ஏன், தாயே? இன்றைக்கு இந்த நகரில் நடந்த உற்சவத்தின் போது கூடியிருந்த கூட்டத்தில் கூடப் பலர் பேசிக் கொண்டார்கள். 'தமக்கை சொல்லைத் தம்பி தட்டவே மாட்டார்' என்று சொல்லிக் கொண்டார்கள். இதோ இருக்கும் என் தோழனை வேண்டுமானாலும் கேளுங்கள்!''

இத்தனை நேரம் சும்மாவிருந்த அத் தோழன், ''ஆம், இளவரசிமார்களே! அது உண்மைதான்! 'பொன்னியின் செல்வருக்குப் பட்டாபிஷேகம் என்றால், அது குந்தவைப் பிராட்டிக்குப் பட்டாபிஷேகம் செய்தது மாதிரிதான்!' என்று ஜனங்கள் பேசிக் கொண்டார்கள். 'இனி மேல் சோழ நாட்டில் பெண்ணரசுதான் நடக்கப் போகிறது! அது நல்லரசாகவும் இருக்கும்' என்று ஜனங்கள் சொல்லிக் கொண்டார்கள்.''

மறுபடியும் இளவரசிகள் 'கலகல' வென்று சிரித்தார்கள்.

''ஆகையால், இளவரசிமார்களே! கருணை கூர்ந்து இந்தப் பட்டாபிஷேகப் பரிசுகளை ஏற்றுக் கொள்ள வேண்டும்!'' என்றான் ஒரு சீன வர்த்தகன்.

''ஏற்றுக் கொண்டு, பொன்னியின் செல்வரிடம் எங்கள் கோரிக்கையையும் சமர்ப்பிக்க வேண்டும்!'' என்றான் இன்னொரு வர்த்தகன்.

''என்ன கோரிக்கை? பொன்னியின் செல்வரிடம் உங்களுக்கு என்ன காரியம் ஆக வேண்டும்? முதலில் அதைச் சொல்

அமரர் கல்கி

ளுங்கள்!'' என்றாள் குந்தவைப்பிராட்டி.

''தேவி! அவரால் எத்தனையோ காரியம் ஆக வேண்டும். எங்களுக்கு மட்டும் அல்ல; சோழநாடு முதல் சீன தேசம் வரையில் உள்ள எல்லா நாட்டு வர்த்தகர்களும் பொது மக்களும் அருள்மொழிவர்மரைத் தான் நம்பியிருக்கிறார்கள். பராந்தக சக்கரவர்த்தியின் காலத்தில் கடல்களெல்லாம் பத்திரமாயிருந்தன. கடற் பிரயாணத்தில் புயற் காற்றினால் நேரும் ஆபத்தைத் தவிர வேறுவித அபாயம் இல்லாமலிருந்தது. கடலில் கப்பல்களைத் தாக்கிக் கொள்ளையடிப்பது என்பது கனவிலும் கேள்விப்படாத காரியமாயிருந்தது. சோழ நாட்டு நாவாய்கள் வர்த்தகப் பொருள்களை ஏற்றிக் கொண்டு இராஜ பாட்டைகளில் செல்வது போல் நிர்ப்பயமாகச் சென்று கொண்டிருந்தன. மாநக்க வாரம், மாயிருடிங்கம், மாபப் பாளம், இலாமுரி தேசம், ஸ்ரீ விஜயம், சாவகம், கடாரம், காம்போஜம் ஆகிய கடல் சூழ்ந்த நாட்டுத் துறைமுகங்களுக்குச் சோழ நாட்டுக் கப்பல்கள் சென்று ஆங்காங்கே இறக்குமதி ஏற்றுமதி செய்து கொண்டு எங்கள் சீன நாட்டுக்குச் சென்றன. அவ்விதமே எங்கள் சீன தேசத்திலிருந்து புறப்பட்ட கப்பல்களும் சோழ நாட்டுக்குத் தங்கு தடையின்றி வந்து கொண்டிருந்தன. அந்தக் காலம் இப்போது பழங்கனவாகப் போய் விட்டது. தேவி! தங்களிடம் உண்மையைச் சொல்லி விடுகிறோம். இந்தப் பட்டுப் பட்டாடைகளை நாங்கள் திரும்பக் கொண்டு போனால் பத்திரமாய் எங்கள் நாட்டுக்குக் கொண்டு போய்ச் சேர்ப்போம் என்பது நிச்சயமில்லை. வழியில் அராபியக் கடல் கொள்ளைக்காரர்களிடம் இந்தப் பட்டாடைகளைப் பறி கொடுப்பதைக் காட்டிலும் சோழ நாட்டு இளவரசிமார்களுக்குப் பரிசாக அளிப்பது மிகவும் விசேஷமான காரியமல்லவா?......''


வ்விதம் அந்தச் சீன வர்த்தகன் சொல்லி வந்த போது குந்தவை தேவியின் கருவண்டுகளை யொத்த கண்கள் நன்கு விரிந்து அளவிலா ஆர்வம் ததும்பப் பெற்றவையாயின.

''பொன்னியின் செல்வரால் அந்தக் காரியம் நடைபெறுமென்று நீங்கள் நினைக்கிறீர்களா? பராந்தக சக்கரவர்த்தியின் காலத்தில் இருந்தது போல், கடற் பிரயாணம் அபாய மற்றதாகும் என்று எண்ணுகிறீர்களா? மாநக்கவாரம், மாயிருடிங்கம், கடாரம், ஸ்ரீ விஜயம் முதலிய நாடுகளில் பொன்னியின் செல்வரின் புகழ் பரவும் என்று நம்புகிறீர்களா?'' என்று கேட்டாள்.

''நாங்கள் நம்புவது மட்டும் என்ன? இந்தச் சோழ நாட்டு வர்த்தகப் பெருமக்கள் எல்லாரும் நம்புகிறார்கள். ஏன்? சற்று முன் நாங்கள் ஒரு சோதிடரிடம் போயிருந்தோம். அவருங் கூடச் சொன்னார்.''

''என்ன சொன்னார்?''

''பொன்னியின் செல்வர் பெரிய பெரிய கப்பல் படைகளைத் திரட்டிக் கொண்டு கடல்களைக்கடந்துசெல்வார்; கொள்ளைக்

காரர்களின் கூட்டங்களை ஒழித்து விடுவார்; கடற் பிரயாணத்தை முன்போல் நிர்ப்பயமானதாகச் செய்து விடுவார்; சோழ நாடு பராந்தக சக்கரவர்த்தியின் காலத்தில் அடைந்திருந்த பெருமையை மீண்டும் அடையும் என்றெல்லாம் ஜோசியர் சொன்னார். ஆனால் இதற்கெல்லாம் சோழ நாட்டு இளவரசிகள் குறுக்கே நின்று தடைஎளப்பாமல் இருக்க வேண்டும் என்றும் கூறினார்!''

''இவ்வளவுதான் சொன்னாரா? இளவரசிகளைப் பற்றி இன்னும் ஏதாவது அவதூறு கூறினாரா?''

''ஆகா! அவதூறா? அப்படியெல்லாம் ஒன்றுமில்லை, தேவி! பழையாறை இளைய பிராட்டியைப் பற்றியும் கொடும்பாளூர்க் கோமகளைப் பற்றியும் அவதூறு சொல்கிறவர்கள் இந்தச் சோழ நாட்டில் யாருமே இருக்க முடியாது. அப்படியிருக்க, இளவரசிகளின் தயவை எதிர் பார்த்திருக்கும் ஜோசியர் மட்டும் துணிந்து சொல்லுவாரா?''

''வேறு என்னதான் அந்தச் சோதிடர் எங்களைப் பற்றிச் சொன்னார்?''

''இளவரசிமார்கள் இருவரும் சற்று முன் அவரிடம் வந்துவிட்டுப் போனதாகக் கூறினார். இரண்டு பேருக்கும் விரைவில் திருமணம் நடக்கும் என்றும் சொன்னார். தேவிமார்களே! பட்டாபிஷேகத்துப் பரிசாக ஏற்றுக் கொள்ளாவிட்டால் திருமணப் பரிசிலாகவாவது இந்தப் பட்டு ஆடைகளை நீங்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும்!'' என்றான் முதலில் பேசிய சீன வர்த்தகன்.

இதைக் கேட்ட வானதி, ''அக்கா! இந்தச் சீன வர்த்தகர்கள் வெறும் வம்புக்காரர்கள். இவர்களைப் போகச் சொல்லுங்கள்!'' என்றாள்.

''கொஞ்சம் பொறு, வானதி! இவர்களுடைய வம்பு இன்னும் எவ்வளவு தூரம் போகிறது, பார்க்கலாம்!'' என்று குந்தவை சொல்லி விட்டு, ''வர்த்தகர்களே! சோதிடர் வீட்டு வாசலில் யானையின் மீது வந்து நின்றவர்கள் நீங்கள் தானே?'' என்றாள்.

''ஆம் தேவி! சோதிடர் வீட்டைத் தேடிப் போனதற்குப் பயன்



உடனே கிடைத்து விட்டது. நீங்கள் வந்திருப்பதைத் தெரிந்து கொண்டோம். உங்களைச் சந்திக்கும் பாக்கியம் இன்று எங்களுக்குக் கிடைக்கும் என்று சோதிடர் கூறியதும் பலித்து விட்டது. அம்மாதிரியே கொடும்பாளூர் இளவரசியைக் குறித்து அவர் கூறியதும் பலித்து விட்டால் எங்கள் கவலையெல்லாம் தீர்ந்து விடும்!''

வானதி மீண்டும் ''அக்கா! இவர்களைப் போகச் சொல்லுங்கள்!'' என்றாள்.

''வர்த்தகர்களே! உற்சவக் கூட்டத்தினிடையே யானை ஏறி வந்தவர்களும் நீங்கள் தானே? அடிக்கடி நீங்கள் யானை மேலிருந்து கீழிறங்கி ஜனக் கூட்டத்தில் கலந்து கொண்டீர்கள் அல்லவா?'' என்று குந்தவை கேட்டாள்.

''ஆம், தேவி! வரப்போகும் பட்டாபிஷேகத்தைப் பற்றி ஜனங்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள் என்று தெரிந்து கொள்ள விரும்பி அவ்வாறு கூட்டத்தில் புகுந்து சுற்றி வந்தோம்.''

''ஜனங்கள் என்ன பேசிக் கொண்டார்கள்? பொன்னியின் செல்வர் முடி சூட்டிக் கொள்ளப் போவதைப் பற்றித் திருப்தியாகத்தானே பேசினார்கள்?''

''இல்லை; முடி - சூட்டு விழாவைப் பற்றியே யாரும் பேசவில்லை.''

''பின்னர், ஜனங்கள் எதைப் பற்றிப் பேசினார்கள்?''

''மதுராந்தகத் தேவரின் பக்தி மகிமையைப் பற்றியே பேசிக் கொண்டார்கள்.''

''அப்படி நல்ல விஷயமாகச் சொல்லுங்கள். பூங்குழலி! கேட்டாயா?'' என்று குந்தவை பூங்குழலியைப் பார்த்துச் சொல்லிவிட்டு, ''மதுராந்தகத் தேவரைப் பற்றி இன்னும் என்னவெல்லாம் சொன்னார்கள்?'' என்றாள்.

''மதுராந்தகருடைய தியாகப் பண்பைப் பற்றிப் பேசினார்கள். சோழ ராஜ்யத்தில் அவருக்குப் பாத்தியதை கொண்டாடும் உரிமை இருந்தும், 'இராஜ்யம் வேண்டாம்' என்று சொல்லி விட்டதை மிகவும் பாராட்டினார்கள்.''

''அப்படியா? அதற்குக் காரணம் என்ன சொல்லிக் கொண்டார்கள்?''

''மதுராந்தகத் தேவர் யாரோ ஒரு படகுக்காரப் பெண் மீது காதல் கொண்டு அவளையே பட்டமகிஷியாக்கிக் கொள்ளுவேன் என்று பிடிவாதம் பிடித்தாராம். அதனால் ஏற்கெனவே அவர் கட்சியிலிருந்த சிற்றரசர்களின் மனம் மாறி விட்டதாம். 'அப்படியானால் மதுராந்தகருக்குப் பட்டம் கிடையாது; பொன்னியின் செல்வருக்கே பட்டம்' என்று சிற்றரசர்கள் சொல்லி விட்டார்களாம். இம்மாதிரி ஜனங்கள் பேசிக் கொண்டார்கள். இளவரசிமார்களே! அந்தப் பாக்கியசாலியான ஓடக்காரப் பெண் இங்கே இருந்தால், அவருக்கும் பட்டாடைப் பரிசு கொடுக்க விரும்புகிறோம்.''

பூங்குழலி இப்போது ''தேவி! கொடும்பாளூர் இளவரசி கூறியது சரிதான். இந்த வர்த்தகர்கள் வெறும் வம்புக்காரர்கள். இவர்களை உடனே போகச் சொல்லுங்கள்!'' என்றாள்.

''கொஞ்சம் பொறு, பூங்குழலி! உனக்கு என்ன கோபம்? இவர்கள் உன்னைப் பற்றி ஒன்றும் தவறாகப் பேசவில்லையே? புகழ்ச்சியாகத்தானே பேசுகிறார்கள்?'' என்றாள் குந்தவை.

''இவர்கள் என்னைப் பற்றிப் புகழ்ச்சியாகவும் பேச வேண்டாம்; இகழ்ச்சியாகவும் பேச வேண்டாம்! எனக்குப் பரிசு கொடுக்கவும் வேண்டாம்!'' என்று பூங்குழலி கிளம்பினாள்.

''அம்மணி! தாங்கள்தானா அந்தப் பாக்கியவதி? ஆகா! ஜனங்கள் பேசிக் கொண்டது ரொம்ப சரி!'' என்றான் சீன வர்த்தகர்களில் ஒருவன்.

''இன்னும் வேறு என்ன பேசிக் கொண்டார்கள்?'' என்று பூங்குழலி புன்னகையுடன் கேட்டாள்.

''மதுராந்தகத் தேவர் தங்களை முன்னிட்டு இந்தச் சோழ ராஜ்யத்தையே தியாகம் செய்துவிட்டார் என்று கூட்டத்தில் ஒருவர் சொன்னபோது, அதற்கு மறுமொழியாக இன்னொருவர், 'பூங்குழலி தேவிக்காக ஒரு இராஜ்யத்தைத் தானா தியாகம் செய்யலாம்? என்னிடம் ஒன்பது இராஜ்யங்கள் இருந்திருந்தால் அவ்வளவு இராஜ்யங்களையும் தியாகம் செய்திருப்பேனே?' என்று சொன்னார். அவர் கூறியதை நானும் ஆமோதிக்கிறேன்!'' என்றான் அச் சீன வர்த்தகன்.

பூங்குழலி கள்ளக் கோபத்துடன், ''அக்கா! இந்த அதிகப்பிரசங்கி வர்த்தகரை உடனே தண்டிப்பதற்குத் தாங்கள் ஏற்பாடு செய்ய வேண்டும்; இல்லாவிட்டால் நானே பொன்னியின் செல்வரிடம் சொல்லி இவருக்குத் தண்டனை வாங்கிக் கொடுப்பேன்!'' என்றாள்.


தைக் கேட்டுக் கொண்டு அப்போது மேன்மாடத்துக்கு வந்தார் மதுராந்தகத் தேவர். மாலை நேரத்துப் பூஜை செய்து விட்டுக் கையில் மலர்ப் பிரஸாதம் எடுத்துக் கொண்டு வந்தவர், பூங்குழலியின் வார்த்தைகளைக் கேட்டு, ''இந்த வர்த்தகர் கூறியதில் தவறு ஒன்றுமில்லையே? எதற்காக அவ

## அருள்வாக்கு

ஒரு பக்கம் தர்மக்ஞர்களை அரசனானவன் போஷித்து அவர்கள் மூலம் தர்மங்களை உபதேசமாகவும், புராணப் பிரவசனங்களாகவும், அவர்கள் நடத்திய சீலமான வாழ்க்கையுதாரணத்தாலும் 'பெர்ஸுவேஷன் மெதட்'டில் பிரசாரம் பண்ணிக் கொண்டுதானிருந்தான். இந்த நாளில் அந்த அம்சங்களை அரசாங்கப் பொறுப்பிலிருந்து அடியோடு துண்டித்து விட்டிருப்பது போல அப்போது இல்லை. இப்படி சாந்தமாகச் சொல்லி தர்மம் பதியாத போது அதர்ம காரியங்கள் நடந்த போது தண்டோபாயத்தைப் பிரயோகித்தான். இப்போது தண்டோபாயத்தை விளியண்ட்டாகப் பண்ண வேண்டும் என்று ஒரு பக்கத்தில் சொல்லிக்கொண்டிருந்தாலும் இன்னொரு பக்கம் போலீஸும் கோர்ட்டும்தான் நாளுக்கு நாள் விருத்தியாகி வருகின்றன.

முற்காலத்தில் தர்மக்ஞர்களைப் போஷித்து ராஜா விருத்தி பண்ணினதால் போலீஸும்கோர்ட்டும்மினிமமாகவே இருந்தன. கோயில் கட்டுவதே ராஜாவின் முக்கிய காரியமாய் இருந்தது. சாஸ்திர மார்க்கப்படி நடந்து சிஷ்டர்களாக, தர்மிஷ்டர்களாக இருக்கிறவர்கள் அந்த நல்ல வழியில் போய் ஞானம் அடைவதற்கு அநுகூலமாக அவர்களுக்கு வேண்டியதையெல்லாம் செய்து கொடுப்பதுதான் அர்த்த சாஸ்திரத்தில் அஸ்திவாரமாகச் சொல்லியிருப்பது.



அஸ்திவாரம் பலமாய் இருந்து மேலே போகும் கட்டடத்தில் பழுது ஏற்பட்டால் ஸுலபமாய் அதைச் சரிசெய்து விடலாம். இந்தக் காரியத்தைத்தான் அன்றைக்குத் தண்டோபாயம் செய்து வந்தது. இதனால்தான் காவல் நிலையங்களும் நியாயஸ்தலங்களும் அப்போது குறைவாக இருந்து கோவில்களும் அன்னசத்திரங்களும், யக்ஞசாலைகளும் நிறைய எழும்பின. இப்போது அஸ்திவாரம் போடாமல் கட்டடம் எழுப்புவதில் இத்தனை ஆயிரம் போலீஸ் ஸ்டேஷன்கள் இருந்தும் இவற்றுக்கும் டிமிக்கி கொடுத்துவிட்டு, ஏராளமானவர்கள் நூதன நூதன ஸாமர்த்தியத் திருட்டுகள், மோசடிகள், கொலைகள், விபசாரக் குற்றங்கள் முதலியன பண்ணிக் கொண்டிருக்கிறார்கள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய ஸுவாமிகள்.

---

ரைத் தண்டிக்க வேண்டும்? அவர் கூறியதை நானும் ஆமோதிக்கிறேன், பூங்குழலி!'' என்றார்.

இவ்விதம் சொல்லிக்கொண்டு வந்தவரை அந்தச் சீன வர்த்தகன் திரும்பிப் பார்த்த போது, பூங்குழலி, ''உண்மையான வர்த்தகர் சொன்னால் சரிதான்; வேஷதாரி வர்த்தகரை எப்படி ஆமோதிக்க முடியும்?'' என்று சொல்லிக் கொண்டே, அந்த வர்த்தகர் தலையில் அணிந்திருந்த சீனத்துத் தலைப்பாகையைப் பிடித்து இழுத்தாள்.

தலைப்பாகை கீழே விழுந்தது; தலைப்பாகையுடன் அவனுடைய முகத்திலிருந்த தாடி மீசை எல்லாம் கீழே விழுந்தன!

சாக்ஷாத் வந்தியத்தேவனுடைய திருமுகம் காட்சி அளித்தது.

''ஐயா! காப்பாற்றுங்கள்!'' என்று அலறிக் கொண்டே வந்தியத்தேவன் மற்றொரு சீன வர்த்தகனின் கழுத்தைக் கட்டிக் கொள்ள முயன்றபோது, அவனுடைய தலைப்பாகையும் தாடி மீசையும் கழன்று விழுந்தன.

பொன்னியின் செல்வர் புன்னகை பொலிந்த முகத்துடன் தோற்றமளித்தார்.

மூன்று பெண்மணிகளும் குலுங்கக் குலுங்க நீண்ட நேரம் சிரித்தார்கள்.

செம்பியன் மாதேவி மேன் மாடத்துக்கு வந்த பிறகு அவரிடம் ஒரு தடவை சொல்லி விட்டு மறுபடியும் சிரித்தார்கள்.

பூங்குழலி! ''அம்மா! இவர்களைக் கோயிலின் அருகே பார்த்த போதே ஒரு மாதிரி எனக்குச் சந்தேகம் தோன்றி விட்டது. அதனாலேதான் தைரியமாக இவர்களை அரண்மனைக்கு வரச் சொன்னேன்!'' என்றாள்.

மதுராந்தகத் தேவர், ''ஆமாம்; எனக்கும் என் நண்பனைத் தெரிந்து போய் விட்டது. ஆகையினாலேதான் இவர்களை இங்கே விட்டு விட்டு நான் பூஜை செய்யச் சென்றேன்!'' என்றார்.

''வானதி! நீயும் நானும்தான் புருஷர்களின் கள்ள வேடத்தைக் கண்டுபிடிக்க முடியாத அசடுகள் போலிருக்கிறது!'' என்றாள் குந்தவை.

''இவர்கள் எதற்காக இந்த மாதிரி வேஷம் போட்டுக் கொண்டு வந்து நம்மை ஏமாற்றப் பார்த்தார்கள்? அதைக் கேளுங்கள், அக்கா!'' என்றாள் கொடும்பாளூர்க் கோமகள்.

''கேட்பானேன், வானதி! என் சகோதரன் இப்படியெல்லாம் கள்ள வேஷம் போடத் தெரிந்தவன் அல்ல. சகவாச தோஷத்தினால்தான் இவ்வாறெல்லாம்

வேடம் போடவும் பொய் புனைந்துரைக்கவும் கற்றுக் கொண்டிருக்கிறான்!'' என்றாள் குந்தவைப் பிராட்டி.

''தேவி! இந்தக் காரியத்துக்கு வந்தியத்தேவர் மீது பழிசுமத்த வேண்டாம். சீன வர்த்தகர்கள் மாதிரி வேஷம் தரிக்கும் அபூர்வ யோசனை என் மனத்திலேதான் தோன்றியது!'' என்றார் அருள்மொழி.

''இம்மாதிரி யோசனை உன் மனத்தில் தோன்றியதற்குக் காரணந்தான் சகவாச தோஷம் என்று சொல்கிறேன். போகட்டும்! இந்த மாதிரி பொய் வேஷம் இனிமேல் நீ போட வேண்டாம்!''

''அக்கா! திருவள்ளுவர் வாய்மையின் பெருமையைப் பற்றி எவ்வளவோ சொல்லியிருக்கிறார். ஆனால் அவர் கூட,

'பொய்மையும் வாய்மை இடத்த:
புரைதீர்ந்த
நன்மை பயக்குமெனின்!'

என்று சொல்லியிருக்கிறார் அல்லவா?''

''திருவள்ளுவர் அந்தக் குறளைப் பாடிய போது இப்படி நீ அதை உபயோகப்படுத்தப் போகிறாய் என்று கனவிலும் கருதியிருக்க மாட்டார்.''

''திருவள்ளுவரை விட்டு விடலாம். இராமர் வனத்துக்குப் புறப்பட்ட போது தம்மைத் தொடர்ந்து அந்த அயோத்தி மக்களைத் திரும்பி அயோத்திக்குப் போகும்படி செய்வதற்குக் கொஞ்சம் பொய்மையைக் கையாளவில்லையா? ஜனங்கள் தூங்கும் போது எழுந்து ரதத்தை அயோத்தியை நோக்கிச் சிறிது தூரம் செலுத்தி விட்டுப் பிறகு கங்கைக்கரையை நோக்கிச் செலுத்தும்படி சுமந்திரரிடம் சொல்லவில்லையா?''

''தம்பி! நீ எல்லாக் காரியங்களிலும் இராமரைப் பின்பற்றுவதாயிருந்தால் எனக்கு மிக்க மகிழ்ச்சிதான்! போகட்டும்! நீங்கள் இந்தப் பொய் வேஷம் பூண்டதால் 'புரை தீர்ந்த நன்மை' என்ன உண்டாயிற்று? அதைச் சொல்வாயா?'' என்று கேட்டாள் குந்தவை.

''நாங்கள் இன்னார் என்பதைக் காட்டிக் கொள்ளாமல் குடிமக்களின் கூட்டத்தில் புகுந்து அங்குமிங்கும் அலைந்து அவர்களுடைய உண்மையான மனக் கருத்துக்களை அறிய முடிந்தது!''

குந்தவை சிறிது ஆர்வத்துடன், ''மக்கள் மனக் கருத்தைப் பற்றி என்ன தெரிந்து கொண்டாய், தம்பி!'' என்று கேட்டாள்.

''எத்தனையோ தெரிந்து கொண்டேன், அக்கா! முக்கியமாக, இந்தச் சோழ சாம்ராஜ்யம் பராந்தக சக்கரவர்த்தியின் காலத்தில் இருந்தது போல் மகோந்நதமடைய வேண்டும் என்பதை மக்கள் எல்லாரும் விரும்புகிறார்கள் என்று அறிந்தேன். சற்று முன்னால் நானும் என் நண்பரும் சீன வர்த்தகர்கள் போல் வேஷம் போட்டுக் கொண்டு இருந்தோமல்லவா? வேஷம் பொய்யாக இருந்தாலும் நாங்கள் கூறியதெல்லாம் மெய்தான்! உங்களிருவரையும் சாலையில் சந்தித்து விட்டுத் தஞ்சைக்கு நாங்கள் சென்றோம். தஞ்சையில் கோட்டை வாசலுக்கு அருகில் உண்மையாகவே இரண்டு சீன வர்த்தகர்களைக் கண்டோம். அவர்களிடம் விலை கொடுத்து இந்தப் பட்டு மூட்டைகளை வாங்கிக் கொண்டோம். அவர்களைப் போல் வேஷம் போட்டுக் கொண்டு திரும்பி வந்தோம். அராபியக் கடல் கொள்ளைக்காரர்களைப் பற்றி நான் சற்று முன் சொன்னதெல்லாம் அந்த வர்த்தகர்கள் எங்களிடம் கூறியதுதான். அராபியக் கடல் கொள்ளைக்காரர்களின் மூர்க்கத்தனத்தை நானும் என் நண்பரும் நேரிலேயே அனுபவித்திருக்கிறோம். தேவி! எது எப்படியானாலும், பட்டாபிஷேக வைபவம் முடிந்ததும் நானும் என் நண்பரும் ஈழ நாட்டுக்குப் புறப்படுவது நிச்சயம். அங்கே எங்கள் காரியம் முடிந்ததும், கடல்களுக்கு அப்பாலுள்ள இன்னும் பல நாடுகளுக்கும் செல்ல உத்தேசித்திருக்கிறோம். உயிருடன் திரும்பி வருவோமா, அல்லது போகுமிடங்களில் போர்க் களத்தில் உயிரை விட்டு வீர சொர்க்கம் எய்துவோமா என்று தெரியாது. ஆகையால் நாங்கள் புறப்படும் வரையில் நீங்கள் எல்லாரும் எங்களுடனேயே இருக்க வேண்டும் என்றும், எங்களுக்கு ஆசி கூறி விடை கொடுத்து அனுப்ப வேண்டும் என்றும் கேட்டுக் கொள்வதற்காகவே அவசரமாகத் தங்களைப் பின்தொடர்ந்து வந்தோம்!''

இவ்வாறு பொன்னியின் செல்வர் கூறி வந்த போது, குந்தவை தேவியின் கண்களில் நீர் ததும்பியது.

பூங்குழலி தழதழத்த குரலில், ''யுத்தம் என்று எதற்காக ஏற்படுத்தியிருக்கிறார்களோ, தெரியவில்லை. மனிதர்கள் ஒருவரையொருவர் நேசித்துக் கொண்டு ஆனந்தமாயிருக்கக் கூடாதா?'' என்றாள்.

''மகளே! அப்படியல்ல! உலகம் உள்ள வரையில் யுத்தம் இல்லாமல் தீராது. பரமசிவனும் பரமேசுவரியும் யுத்தம் செய்ய வேண்டியிருந்ததே! உலகத்தில் தர்மத்தை நிலைநாட்டுவதற்காகப் பிறந்தவர்கள் சிலர் உண்டு. அவர்கள் யுத்தம் செய்யத்தான் வேண்டும்!''

இவ்விதம் சிவபக்த சிரோமணியும் பரம சாதுவுமான செம்பியன்மாதேவி கூறியதைக் கேட்டு அனைவரும் ஆச்சரியக் கடலில் ஆழ்ந்தார்கள்.

(தொடரும்)

பம்பாயில், நடைபாதையில் ஒரு பெண் குழந்தையைப் பத்திரிகையாளர் ஒருவர் பேட்டி கண்டார்....

நீ பெரியவளானதும் என்ன செய்யப் போகிறாய்?

வக்கீலாகப் போகிறேன்

நீ வக்கீலை எங்கு பார்த்தி ருக்கிறாய்? சினிமாவிலா?

இல்லை. என்னை யாரும் சினிமா வுக்கு அழைத்துப் போக மாட்டார் கள்

வேறு எங்கு பார்த்தாய்?

எங்கள் அப்பா ஜெயிலில் இருக்கி றார். அவ்வப்போது கோர்ட்டுக்கு அழைத்து வருவார் கள். அப்பொழுது அம்மா எங்களை யும் அழைத்துப் போவார். அங்கு தான் வக்கீல் களைப் பார்த் திருக்கிறேன். எனக்கு வக்கீல் ஆகத்தான் ஆசை.

# பந்த்

நாட்டில் விலைவாசி உயர்வை எதிர்த்து அன்று ஊர் முழுவதும் பந்த். எங்கும் வித்தியாசமான அமைதி. முக்கால் வாசிச் சாலைகள் வெறிச்சோடிக் கிடந்தன. பஸ்கள் இல்லை. கடைகளும் மூடப்பட்டிருந்தன.

பந்த் ஒழுங்காக நடக்கிறதா இல்லையா என்று சே. வா. கட்சியினர் தீவிரமாகப் பாரா பார்த்துக் கொண்டிருந்தனர். இந்த மாதிரியான சமயங்களில் மக்களின் கவனத்தை ஈர்த்து, அனுதாபங்களைச் சம்பாதித்துக் கட்சிக்குப் பெருமை சேர்க்கும் அதிரடித் தொண்டர்கள், அந்த வட்டாரத்தையே ஒரு கலக்குக் கலக்கிக் கொண்டிருந்தார்கள்.

பதினெட்டாம் வட்டச் செயலாளர் வீராச்சாமி தன் வஸ்தாதுத் தனத்தைப் பறைசாற்ற, வாய்ப்பை எதிர்பார்த்த வண்ணம் சாலையின் ஓரமாய் நின்றிருந்தான். அவனுடைய தலைமையில் தான் அந்தப் பகுதியில் கட்சிக்காரர்கள் மும்முரமாய் இயங்கிக் கொண்டிருந்தார்கள்.

மூடாமல் இருக்கும் கடைகளை மூடவைப்பதும் வரும் போகும் கார்களை மடக்கிக் கண்ணாடியின் மீது சாக்பீஸால் எழுதுவது, போஸ்டர் ஒட்டுவது, தார்ரோட்டின் மீது கண்டன ஸ்லோகங்களைக் கவிதை வடிவில் எழுதி அலங்கரிப்பது போன்ற வேலைகளில் முழுமூச்சாய் ஈடுபட்டிருந்தனர்.

வீராச்சாமி பீடியைப் பற்றவைத்தவாறு பார்வையை அங்குமிங்கும் சுழல விட்டான். வயிற்றில் இறங்கிய சரக்கு, தீவிரமாய் வேலை செய்து கொண்டிருந்தது.

அப்போது ஒருவன் வேகமாய் வந்து அவனை வணங்கினான். ''அண்ணே...''

''என்ன விஷயம்? எல்லாக்கடையும் ஒழுங்கா மூடியிருக்கா?''

''அதைத்தாண்ணே சொல்ல வந்தேன். ஒரே ஒருத்தன் ரொம்ப நேரமா மக்கர் பண்றாண்ணே.''

''என் பேரைச் சொன்னியா?''

''சொன்னேண்ணே. யாரா இருந்தா எனக்கென்னடான்னு தெனாவட்டாப் பேசறாண்ணே.''

''கடை பேரென்ன?''

''முத்து மெடிகல்ஸ்.''

''ஓ! அந்த ராஸ்கல் தானா? ஆளும் கட்சி சப்போர்ட் இருக்குங்கிற திமிரா? ஒருகை பார்த்துடறேன்...'' என்றவன் ஏற்கெனவே கொடுவாள் போலிருந்த மீசையை இன்னும் முறுக்கிக் கொண்டான். பக்கத்தில் நின்றிருந்த கூட்டாளியைப் பார்த்தான்.

''துரை! சாமானை எடுத்துக்க. சைக்கிள் செயினை எங்கே வைச்சிருக்கே?''

''இடுப்புல சுத்தியிருக்கேன் வாத்தியாரே!''

''சரி கிளம்பு. அந்தக் கடைக்காரனுக்கு நம்ம ட்ரேட் மார்க் முத்திரையைக் குத்திட்டு வரலாம்.''

விரைப்பான நடையுடன் அந்த இருவரும் முன்னே செல்ல, இன்னும் இரண்டு சிஷ்யர்கள் கையில் தலா இரண்டு சோடா பாட்டில்களுடன் பின் தொடர்ந்தனர்.

பத்து நிமிட நடையில் முத்து மெடிகல்ஸ் வந்தது. பிரதான சாலையிலிருந்து இரண்டு பர்லாங் தூரம் உள்ளே தள்ளியிருந்தது. நடுத்தரக் குடிமக்கள் வசிக்கும் பகுதி அது.

கல்லாவில் உட்கார்ந்திருந்த முதலாளி சிங்காரவேலு அவர்கள் நால்வரும் வேகமான நடையுடன் வருவதைக் கண்டதும் எழுந்து நின்றார். முகத்தில் கலவரம் படர்ந்தது. இப்போது நிலைமையை எப்படிச் சமாளிப்பதென்று யோசித்துக் கொண்டிருக்கும் போதே, வீராச்சாமி சட்டியாய் அவரெதிரே வந்து நின்றான். தகரத்தன்மையான குரலில் கேட்டான்.

''டேய் சிங்காரம்! உன் மனசுல என்னடா நினைச்சுக் கிட்டிருக்கே?''

''கொஞ்சம் மரியாதையாப் பேசு வீராச்சாமி.''

''உனக்கென்னடா மரியாதை? இது வரைக்கும் நீ சம்பாதிச்சது போதாதுன்னு இன்னைக்கும் கடையைத் திறந்து வைச்சுக் கொள்ளையடிக்கிறியா? ஊரெல்லாம் கடை மூடியிருக்கிறது உனக்குத் தெரியலை?''

''இந்தக் கடையைத் திறந்து வைச்சிருக்கிறதுல நியாயம் இருக்கு வீராச்சாமி. கவர்மெண்ட் ஆஸ்பத்திரி மூடியிருக்கான்னு போய்ப் பாரு.''

''என்னடா எடக்காப் பேசறே? நான் யாருங்கிறதை மறந்துட்டியா?''

''மறக்கலை. உனக்கு உண்மையைப் புரிய வைக்க முயற்சி பண்றேன்.''

அவனுக்கு எதுவும் காதில் ஏறவில்லை. சரக்கு ரத்தத்தில் கலந்து உஷ்ணமாய் வேலை செய்ய ஆரம்பித்தது. கோபம் இரட்டிப்பாக்கியது.

''டேய் சிங்காரம்! உனக்குக் கடைசியாச் சொல்றேன். ஒழுங்காக் கடையை மூடிடு. இல்லேன்னா உன் கதை கந்தலாயிடும்.''

சிங்காரவேலு உள்ளுக்குள் பயந்திருந்தாலும் மேலுக்கு அசராமல் இருந்தார்.

''கடையை மூடச் சொல்ல உனக்கு அதிகாரம் இல்லை வீராச்சாமி. வீணா என்கிட்ட வம்பு பண்ணாதே.''

திரும்பிப் பார்த்தான் வீராச்சாமி.

''டேய் மாசி. எடுத்து விடுங்கடா பாட்டிலை.''

மதுமனோ

தலைவரின் அனுமதி கிடைத்ததுதான் தாமதம். சிஷ்யர்கள் சோடா பாட்டிலை உள்ளே பறக்க விட்டார்கள். பாட்டில்கள் உடைந்து சில்லுகள் சத்தத்துடன் நாலா திசையிலும் பரவின.

வேலையாட்கள் நடுங்கிப்போய் நீள மான மேஜைக்கடியில் அப்படியே பதுங்கிக் கொண்டார்கள்.

வீராச்சாமி உள்ளங்கையை விரித்துக் கல்லா மீது ஓங்கி அடித்தான்.

''போதுமா?'' என்றான் குரூரமாய். ''இப்பவாச்சும் கடையை மூடறியா, இல்லை இன்னும் கச்சேரி வைக்கட்டுமா?''

''வீராச்சாமி! இது ரொம்ப அராஜகம். வேண்டாம்! நான் சொல்றதைக் கேளு.''

சட்டென இடுப்பிலிருந்து கத்தியை உருவினான் வீராச்சாமி. அதன் பளபளப்பையும் கூர்மையையும் அவர் முகத்தருகே காட்டினான்.

''நீ நல்ல படியாச் சொன்னாக் கேட்க மாட்டே. இதால உனக்கு அலங்காரம் பண்ணினாத்தான் வழிக்கு வருவே போலிருக்கு.'' சிங்கார வேலுவுக்கு நெஞ்சு தடதடவென்று அடித்துக் கொண்டது. குழந்தை குட்டிகளின் ஞாபகம் வர, முகம் வியர்த்தது. கத்தி கழுத்துக்கு நெருங்கி வர, ஒவ்வோர் அடியாய்ப் பின் வாங்கினார். ஏறக்குறைய கெஞ்சுவது போலக் கேட்டுக் கொண்டார்.

''வீராச்சாமி என்னை விட்டுடு. நான் குழந்தை குட்டிக்காரன். கடையை நாசம் பண்ணிடாதே!''

ஆனால் அவனுக்கு இரக்கம் வரவில்லை. குரூரமாய் ஒரு சிரிப்பை உதிர்த்தான்.

''அப்படி வாடா கண்ணா வழிக்கு. இப்ப தெரிஞ்சுக்கிட்டியா ஐயா யாருன்னு.

அவர் தலை நிமிரவில்லை. வேலையாட்கள் எதிரே தன் மானம், மரியாதை பறிபோனதில் நிலை குலைந்து போயிருந்தார்.

சரியாக அதே சமயத்தில்தான் வீராச்சாமி கல்லாப் பக்கத்திலிருந்த கடைச் சாவியை எடுத்தான். தொலைபேசி இணைப்பையும் துண்டித்தான்.

''ஒரு அடி கூட முன்னே வைக்கக்கூடாது! சத்தம் வெளியே வந்துச்சு ஒரே சொருவு...'' என்றவன், பக்கத்தில் நின்றிருந்த சகாவிடம் சொன்னான்.

''டேய்! கல்லாவைக் காலி பண்ணுடா.''

நிமிடத்தில் கல்லா காலியாயிற்று. தொண்டர்கள் பாக்கெட்டை நிரப்பிக் கொண்டார்கள்.

சிங்காரவேலு அத்தனையையும் வேதனையாகப் பார்த்துக் கொண்டிருந்தார். வேலையாட்களுக்கு உயிர் பிழைத்தால் போதுமென்றிருந்தது. ஓர் ஓரமாய்ப் பதுங்கி நின்றனர்.

வீராச்சாமி தன் சகாக்களுடன் சட்டென வெளியேறி, கடை ஷட்டரை சுத்தமாய்க் கீழே இறக்கிப் பூட்டிவிட்டுச் சாவியைப் பாக்கெட்டில் வைத்துக் கொண்டான். வெற்றி மிதப்பில் மாசியைப் பார்த்தான்.

''எப்படி நம்ம ட்ரேட் மார்க்?''

''அபாரம் வாத்தியாரே!''

கொள்ளையடித்த பணம் அவர்களுக்குள் அந்தஸ்து ரீதியாகப் பங்கு போடப்பட்டது. செல்லும் வழியில் சரக்கு வாங்கி மீண்டும் வயிற்றை நிரப்பிக் கொண்டார்கள்.



போதை தலைக்கு விரு விருவென்று ஏற, கோணல்மாணல் நடையுடன் அந்த வட்டாரத்தை மீண்டும் பாராபார்த்தார்கள். வீராச்சாமி சற்று நேரம் நிழலில் ஒதுங்கி நின்றான். அவனுக்குத் திடீரெனக் கிடைத்த பணம் ஒரு பக்கம் மகிழ்ச்சியைத்தர இன்னொரு பக்கம் தன் வஸ்தாது தனத்தை நினைத்துப் பெருமையாகவும் இருந்தது. பகல் முழுவதும் அங்கேயே கழித்தான்.

பொழுது சாய்ந்து, போதை குறைந்ததும் வீட்டின் ஞாபகம் வந்தது. தொண்டர்களிடம் விடை பெற்றுக் கொண்டு நடந்தான்.

அவன் வீடு உள்ளே ஒதுக்குப்புறமாய்ப் புளியந்தோப்பில் இருந்தது. போலீஸ்காரர்கள் அடிக்கடி விஜயம் செய்யும் பிரதான ஸ்தலமாய் இருந்தது அது.

வீட்டை நெருங்கியதும் வீராச்சாமி கலவரமானான். வீடு அசாதாரண சூழ்நிலையில் இருப்பதைக் கவனித்தான. அக்கம் பக்கத்து வீட்டார்கள் வாசலில் குழுமியிருந்தார்கள். அழுகுரல்கள் கோரஸாய்க் கேட்டன.

உள்ளே சென்று பார்த்ததும் இக்கென்றது அவனுக்கு. ஏழு வயது நிரம்பிய அவனது ஒரே மகன் பிணமாய்ப் படுத்திருந்தான். பக்கத்தில் மனைவி கதறி அழுது கொண்டிருந்தாள். கணவனைக் கண்டதும் அவளது அழுகை இன்னும் பலத்தது.

"என்னங்க...! நமக்கிருந்த ஒரே பிள்ளைக்கு வந்த கதியைப் பார்த்தீங்களா? நமக்கு ஏங்க இந்தச் சோதனை? இவனை எவ்வளவு ஆசையா வளர்த்தேன். கடைசியில நம்மை விட்டுட்டுப் போயிட்டானே... கண்ணா அப்பா வந்திருக்கார் பாரேண்டா...." மகனின் கரங்களைப் பற்றி உலுக்கினாள்.

வீராச்சாமி மனசு பதறியது. விசும்பலுடன் மனைவியை விசாரித்தான். "என்ன ஆச்சு மரகதம்? காலைல கூட இவன் நல்லாத்தானே இருந்தான்."

"என்னென்னு சொல்றதுங்க. மத்தியானம் எங்கேயோ போய் விளையாடிட்டு வந்தான். இருந்தாப்பல இருந்து திமர்னு வாந்தியெடுத்தான். கைகால் வேற கூடவே இழுத்துக்கிச்சு. உடனுக்குடன் ரிக்ஷா வைச்சு இவனை டாக்டர்கிட்ட கூட்டிட்டுப் போனேன். அவர் இவனைச் சோதிச்சுப் பார்த்துட்டு, உடனே ஓர் ஊசி மருந்தை வாங்கியாறச் சொன்னார். நானும் அவசரமாப் போனேன். ஆனா பாவிங்க எல்லா மருந்து கடையையும் மூடி வைச்சுட்டாளுங்க. முத்து மெடிகல்ஸ் கூட மூடி இருந்துச்சுங்க. எனக்குக் கைகால் ஓடலை. என்ன செய்யறதுன்னு புரியாம நான் டாக்டர்கிட்ட திரும்பி வந்தேன். அதுக்குள்ள நம்ம பையன் கண்ணை மூடிட்டாங்க. கடவுள் நமக்கு எழுதி வைச்ச விதியைப் பார்த்தீங்களா?"

வீராச்சாமிக்குப் பேச்சு வரவில்லை. அசைவற்று நின்றிருந்தான்!





# சந்தனக் காற்று

முன் பாதி படு இளுகிளு என்றால் பின்பாதி செமை விறுவிறு.

கிராமியப் பெண்ணை மணந்து கொள்ள முடிவு செய்து, அது தொடர்பாகக் கோயில் விழாவில் பத்துப் பன்னிரண்டு மல்யுத்த வீரர்களுடன் மோதி அவர்களை அடித்து வீழ்த்தும் போதும் சரி,

லீவு முடிந்து ராணுவ தளத்துக்குத் திரும்பிச் செல்வதற்கிருந்த அந்தச் சில நாட்களுக்குள் நொடிப் பொழுதையும் வீணடிக்க மனமின்றிப் புது மனைவியுடன் மகிழ்வலைகளில் முடிந்த மட்டில் மூழ்கித் திளைக்க முனைவதிலாகட்டும் சரி,

ராணுவ வீரர் விஜயகாந்த் ஒரே சுறுசுறு.

அதன்பின் காஷ்மீருக்குப் போகிறவர், ராணுவச் சூழ்நிலை காரணமாகத் திரும்பி வருவதற்குள் ஐந்தாண்டுகள் கடந்து விடுகின்றன. மகள் பிறந்து வளர்ந்து விடுகிறாள். விடுப்பில் வந்தவர் மகளைக் கான்வென்ட்டில் சேர்த்து, ஹாஸ்டலில் தங்கிப் படிக்க ஏற்பாடு செய்துவிட்டு மனைவியை மட்டும் தம்முடன் அழைத்துக் கொண்டு போக முடிவு செய்து, ஊட்டிக்கு வந்து நண்பன் வீட்டில் தங்க, அதுவே அவருடைய வாழ்வின் திருப்புமுனையாகி விடுகிறது.

கௌதமிக்கும் அதுவரையில்தான் வேலை.

'ராணுவத்தானைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்' என்று கிராமியத்தனமாக முரண்டு பிடித்து, விஜயகாந்த் அவரை நெருங்க மேற்கொண்ட முயற்சிகளில் மருண்டு நின்று, திருமணத்துக்குப் பின் கணவனுடன் ஏற்படும் நெருக்க உறவில் தன்னை மறந்து சுருண்டு விழுந்து, பின்னர் அந்த ஊட்டி நண்பன் வீட்டில் தனிமையில் இருக்க நேரும் சூழ்நிலையில் மிரண்டு திகைத்து.

பாதிவரை மட்டுமே வந்தாலும் கௌதமி பளிச்.

என்றைக்கோ சினிமாக் கொட்டகையில் முன்பின் தெரியாத அந்தக் கிராமியப் பெண்ணிடம் சில்மிஷம் செய்யப் போய் அவளிடம் அடி வாங்கி அவமானப்பட்டது மாறாத வடுவாக அந்த ஊட்டி நண்பனின் நெஞ்சில் நிலைத்துவிட,

அதே சம்பவத்தின்போது உடனிருந்து பங்கேற்று அவமானத்துக்குள்ளாகியிருந்த அவனுடைய இரு சகாக்களும் அவனுமாக இப்போது கிடைத்துள்ள சந்தர்ப்பத்தைப் பழிவாங்கப் பயன்படுத்திக் கொள்ளக் குடிபோதையில் முடிவு செய்து, தனித்திருக்கும் கௌதமியைக் கெடுக்க முயல,

தப்பித்து வெளியே ஓடும் அவர் கொட்டும் மழையில் துரத்தி வருகிறவர்களுடன் போராடி, அதன் விளைவாக மேலாடை இழந்த நிலையில் தன் கற்பைக் காத்துக் கொள்ள வேறு வழியில்லாமல் போய், வசதியாகப் பக்கத்தில் ஊன்றப்பட்டிருந்த அம்மன் கோயில் திரிசூலத்தையெடுத்துக் குத்திக் கொண்டு உயிரை விட்டு விடுகிறார்.

அதன்பின் தலைமறைவாகிவிடும் அந்த மூன்று பேரையும் ஒவ்வொருவரையாகத் தேடிப் பிடித்துக் கொலை செய்துவிட்டு விஜயகாந்த் தூக்குமேடைக்குப் போவது மீதிக்கதை.

பழிவாங்கும் கொலைவெறி மிகுந்தவராகிப் பரபரப்பேற்படுத்தி விடுகிறார்.

முன் பகுதியில் நிகழ்ச்சிகள் குறைவு என்பதாலோ என்னவோ பாடல்கள் மிகுதி. பின் பகுதியில் தேடல், அடி, உதை, குத்து, ரத்தம், போலீஸ், தண்டனை.

விழித்திருக்கும் நேரமெல்லாம் போதையில் திளைத்திருக்கும் மாமன் எஸ். எஸ். சந்திரன் —

கடமையே உருவான கம்பீரக் கமிஷனர் கிட்டி —

சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் சட்டத்தைச் சாடும் டாக்டர் சரத்பாபு —

செய்தது மகனேயானாலும் குற்றம் குற்றமே என்று நிமிர்ந்து நிற்கும் பிரிகேடியர் வினு சக்கரவர்த்தி —

நினைவில் நிற்பவர்கள்.

அதுசரி, படத்துக்கும் தலைப்புக்கும் என்ன சம்பந்தம்? ஒரு பாடலின் பல்லவியில் 'சந்தனக் காற்றில்' என்று வருகிறதே, அதுவா?

— சி. ஆர். கே.

கடந்த சில மணி நேரங்களாக ரங்கன் நடந்திருந்தான். இப்போது சாலையில் மாலுவின் வீட்டின் எதிரே நீண்ட நேரமாய் நின்று கொண்டிருக்கிறான். இருப்பினும் உடல் வலியோ, கால் வலியோ தெரியவில்லை. மனம்தான் வலித்தது. கடந்த சில நாட்களாக எதிர்பாராததெல்லாம் நடந்து கொண்டு வருகின்றன. அவனுடைய வாழ்க்கையைப் பாதிக்கும் சம்பவங்கள், நிகழ்ச்சிகள்.

அவனுக்கு இருபத்தைந்து லட்சம் ரூபாய் பரிசாக விழுந்திருக்கிறது. ஆனால் லாட்டரிச் சீட்டு அவனிடம் இல்லை. யாரை நம்பி அதை ஒப்படைத்திருந்தானோ அவன் ஊரிலேயே இல்லை. ரமணி ஏமாற்ற மாட்டான் என்ற நம்பிக்கை ஆரம்பத்தில் ஒரு தாம்புக் கயிறாகத்தான் இருந்தது. ஆனால், அது மெல்ல மெல்ல மெலிந்து நைந்து போய்க் கொண்டிருக்கிறது. ரமணி முழுதுமா அவனை வஞ்சிக்கப் போகிறான்? பாதித் தொகையாவது தரலாமே?

பற்பல விதமான மகிழ்ச்சி ஆரவார எதிர்பார்ப்புக்களுடன் அவன் தனத்தைக் கல்யாணம் செய்து கொண்டான். தாம்பத்தியம் என்ற வார்த்தைக்கு அர்த்தமே இல்லாத வாழ்வாக அமைந்துவிட்டது. தனத்துக்கு ஒன்றே ஒன்றுதான் தெரியும். ரங்கனிடமிருந்து பணத்தைக் கறப்பது. அவளுக்கு வயிற்றில் கட்டி என்று அறிந்த போது துடிதுடித்துப் போனான். ரண சிகிச்சை என்று வந்த போது, பணச் செலவினால் ஏற்பட்ட மனக்கஷ்டத்தை விட, அவளைப் பற்றிய பயம்தான் மேலோங்கி நின்றது. ஆனால் தனம் அவனுடைய மனத்தைப் புரிந்து கொள்ளவில்லை. அறிந்து கொள்ள இம்மியும் ஆசைப்படவுமில்லை. இப்படிப்பட்ட மண வாழ்க்கையையா அவன் எதிர்பார்த்தான்?

இன்னொரு விஷயமும் அவனை வாட்டியது. தனத்தின் வயிற்றுக் கட்டியைப் பற்றிச் சுகந்தியிடம் கூறிய போது, அவள் விஷமமாகச் சிரித்தாள்.

ஒரு பெண் வாந்தி எடுப்பதும், தலை சுற்றிக் கண்கள் செருகப் படுத்திருப்பதும், உணவே வெறுத்துப் போவதும் மிகவும் சாதாரண விஷயங்கள் என்பதைச் சொல்லாமல் சொல்லிச் சுகந்தி சிரித்தாள். சுகந்திக்கு ஏன் இந்த விஷயத்தில் ஒரு திருப்தி!

ரங்கன் துவண்டு போனான்.

எதிர்பார்த்த மணவாழ்க்கை கிடைக்கவில்லை.

அவன் வாங்கிய லாட்டரிச் சீட்டுக்கு இருபத்தைந்து லட்சம் ரூபாய் என்று அறிவிப்பு வந்திருக்கிறது. ஆனால் பணம் கிடைக்காது போலிருக்கிறது. ரமணி தன்னை ஏமாற்றி விட்டான் என்று அவனால் யாரிடம் சொல்ல முடியும், புகார் செய்ய முடியும்?' டீ. காப்பி வாங்கி வரச் சொல்லுவது போல, லாட்டரிச்

# அதிர்ஷ்ட தேவதை

(10)





"ஏங்க, சன்யாசம் போன நீங்க பழையபடி ஏன் சம்சாரியா மாறிட்டீங்க?"

"அவங்கவங்களும் வந்து குடும்பக் கஷ்டத்தை எங்கிட்ட சொல்றதைக் கேட்டுக் கேட்டு என் குடும்பக் கஷ்டமே தேவலைன்னு தோணிடுச்சு!"

— காயத்ரி.

சிட்டும் வாங்கி வரச் சொன்னேன்' என்று ரமணி சொன்னால் ஊரும் உலகமும் அவனைத்தான் நம்பும். டயரியில் ரமணி தன் கைப்பட நம்பர்களை எழுதி வைத்திருக்கிறான். அந்த டயரியை ஆதாரமாகவோ சாட்சியாகவோ கொண்டு வரவும் முடியாது. 'என்னுடைய மேஜையைத் திறந்து ரங்கன் டயரியைத் திருடிவிட்டான்' என்று ரமணி கூறலாமே?'

இன்னோர் உண்மையும் அவனைத் தாக்கியது. சிட்டு வாங்கும்போதெல்லாம், கடைக்காரரிடம் ரமணியின் பெயரைத்தான் கூறியிருக்கிறான்.

ரமணி ஏமாற்றுகிறானா?

ரமணி ஏமாற்றக் கூடியவனா?

இருபத்தைந்து ரூபாய்க்கே ஒருவன் இன்னொருவனை ஏமாற்றும் இந்த நாளில் இருபத்தைந்து லட்சம் என்றால்...

ஆனால் ரங்கன் மனத்தில் ஒரு சிறு ஆசை பிறந்தது.

பாதிப் பணம் வேண்டாம்.

ஏன் ஐந்து லட்சம் கூட வேண்டாம்.

ரமணி ஒரு லட்சமாவது ரங்கனுக்குத் தர மாட்டானா?

திடீரென்று மாலுவின் குரல் கேட்டது.

"ரங்கா!"

இத்தனை நேரச் சிந்தனைகளையும் ரங்கன் ஒரு நொடியில் மறந்தான்.

"மாலு அம்மாவா?"

"ரொம்ப நேரமா நின்னுட்டிருக்கியா?"

"நான் அப்பவே வந்துட்டேன்."

"ஏன் உள்ளே வரலே...? சரி, சரி, மணி ஒம்பதே முக்கால் தாண்டியாச்சு. வா, போகலாம்."

அவள் கையில் ஒரு சிறு பெட்டி இருந்தது.

"அதைக் கொடுங்கம்மா. நான் தூக்கிக்கறேன்."

"வேண்டாம். கனமில்லை. ரெயில் பத்தே முக்காலுக்குத்தான். பஸ்லே போனாக் கூடப் போதும்."

"எங்கே மாலு அம்மா போறோம்?"

"சேலத்துக்குப் போறோம்."

"ரமணி சார் அங்கேதான் இருக்காரா?"

"ஆமாம்... வா... அதோ பதினொண்ணாம் நம்பர் பஸ் வர்றது."

மாலு விரைவாக நடந்து பஸ்ஸில் ஏற, ரங்கன் ஓடினான்.

**மா**லை மணி ஐந்து.

ஆபீஸ் ஹால் சின்னஞ் சிறிதாக ஒரு வட்டமாக மாறியது. அந்த வட்டத்தின் மையத்தில் ஒருவர் நின்று கொண்டிருந்தார். அவரைச் சுற்றிச் சுகந்தி, வெங்கி, நெய் ரோஸ்ட் இச்சா, மற்றும் மயில்சாமி ஆகியோர் நின்று கொண்டிருந்தார்கள்.

"ரமணி என்கிறவர் இந்த ஆபீசில்தானே வேலை செய்யறார்?"

"ஆமாம். நீங்க யாரு?" என்று கேட்டாள் சுகந்தி.

"நான் லிங்கிச் செட்டித்தெருவிலே, 'அதிர்ஷ்டலட்சுமி லாட்டரிச்சிட்டுக் கடை' அப்படின்னு நடத்திக்கிட்டு வர்றேன். என் கடையிலிருந்துதான் அடிக்கடி ரமணி டிக்கெட் வாங்குவார்."

"அந்த ஆளுக்கு ப்ரைஸ் விழுந்திருக்கா?" என்று கேட்டான் மயில்சாமி.

"எவ்வளவு ரூபா?" — வெங்கி.

"இருபத்தஞ்சு லட்சம்!"

"என்ன...! என்ன...!"

"இருபத்தஞ்சு லட்சமா?"

"ரமணிக்கா?"

"அவர் எங்கே?" என்று கேட்டார் கடைக்காரர்.

"ரெண்டு நாளா லீவு!" என்ற இச்சா, "ரமணிக்கே இந்த விஷயம் இன்னும் தெரியாது போலிருக்கு!" என்றான்.

"யோவ் கடைக்காரரே, சரியாப் பார்த்துச் சொல்லுய்யா. ரமணிதான் அந்த டிக்கெட்டை வாங்கினாரா?" என்று மயில்சாமி கேட்டான்.

"என் நோட் புத்தகத்திலே அவர் பேர்தான் இருக்கு."

"நீ தப்பா எழுதியிருக்கேய்யா! டிக்கெட் வாங்கினது என் மருமகப் புள்ளே. பேரு ரங்கன். நீ ரங்கன் பேரை எழுதியிருக்கணும்!" மயில்சாமி சிறினான்.

"இந்தாப்பா, நான் யார் என்ன டிக்கெட் வாங்க வந்தாலும் அவர் பேர் என்னன்னு விசாரிச்சுக் குறிச்சு வைச்சுப்பேன். இதுக்கு ரெண்டு காரணம். ஒண்ணு, பரிசுத்தொகை

பி.வி.ஆர்.



"நாலு பேர் சேர்ந்து செய்யற காரியத்தை தான் மட்டுமே செய்ய வேண்டியிருக்குன்னு வருத்தப்படறார்."

"அப்படி என்ன வேலை பாக்கறார் அவர்?"

"ஃபோர்மேனா இருக்கார்!"

— ஷோபனா வெங்கட்ராமன்.

யிலே பத்து சதவீதம் ஏஜெண்ட்டுக்கு உண்டு. நான் ஒரு ஏஜெண்ட். இரண்டாவது, நாளைக்கு கோர்ட்டு கேஸுன்னு வந்தா நான் கூண்டிலே ஏறிச் சாட்சி சொல்ல வேண்டி வரும். அஞ்சாறு வருஷம் முன்னாடி ஒரு கேஸ் வந்தது. அதிலே என்னாலே சரியாச் சாட்சி சொல்ல முடியலே... அதுதான் இப்பவெல்லாம் ரொம்பக் கவனமா எழுதிட்டு வர்றேன்."

"அல்லாம் சரித்தான்யா.... லாட்டரிச் சீட்டு வாங்கினது என் மருமகப் புள்ளை ரங்கன்தான்."

"நீ சொன்னாப் போதுமாய்யா. நீ சொல்ற ரங்கன்ங்கிற பேரு என் நோட்டுப் புத்தகத்திலேயே இல்லை. ஆனா ரமணி பேரு நிறைய இடத்திலே இருக்கு..." என்றார் கடைக்காரர்.

"உன் கைகாலை ஒடிச்சு, உன் புஸ்தகத்தையும் கிழிச்சு நெருப்பிலே போட்டுடுவேன்!" மயில்சாமி, கடைக்காரரின் கையைப் பிடித்தான்.

"டேய் மயிலு, அவர் கையை விடு... உன்னை அலாக்காத் தூக்கி இந்த மாடியிலிருந்து எறிஞ்சுடுவேன்!" என்ற வெங்கி, "நீ போ சார்... எதுக்கும் இந்த ஆள் பேர்லே பூக்கடைப் போலீஸ்லே கம்ப்ளெய்ண்ட் எழுதிட்டுப் போ... சாட்சி சொல்ல நான் வர்றேன்," என்றான்.

மயில்சாமிக்கு ஆத்திரம் பீறிட்டுக் கொண்டுவந்தது. ஆனால் அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. மௌனமாய்த் தன் இருக்கைக்கு நடந்தான்.

"ரமணி வந்ததும், முடிஞ்சா சொல்லியனுப்புங்க," என்றார் கடைக்காரர்.

"இது எங்க வேலை இல்லை. நீங்க தினசரி வந்து பாருங்க!" என்றான் இச்சா.

அவர் போன பிறகும் ஆரவாரம் அடங்கவில்லை.

ஒரே ஓர் ஆச்சரியம்தான் எல்லோர் மனத்திலும் ஏற்பட்டது.

இத்தனை வருடங்களாக லாட்டரிச் சீட்டு வாங்கியது ரமணியா?

சர்ச்சை பிறந்தது.

"இருக்கவே இருக்காது, இச்சா. ரமணி வாங்கியிருந்தா, ஏன் நம்பரை ஒரு டயரியில் நோட் பண்ணி ரங்கன் கையில கொடுத்திருக்கணும்?" என்றாள் சுகந்தி.

"நீ சொல்றதிலும் ஒரு பாயிண்ட் இருக்கு, சுகந்தி... ஒருவேளை ஆளுக்குப் பாதியாப் போட்டிருப்பாங்களோ... டிக்கெட்டை ரமணியும் டயரியை ரங்கனும் வைச்சிருக்காங்க."

"அடிச்சா அதிர்ஷ்டம் இப்படி அடிக்கணும்!" என்ற வெங்கி, "நான் அஞ்சு ரூபா கட்டினா குதிரை இருபத்தஞ்சு கூடத் தர்றதில்லே," என்று புலம்பினான்.

"ஆனா ஒரு விஷயத்தைப் பார்த்தீங்களா இச்சா?" என்றாள் சுகந்தி.

"என்ன?"

"நேத்து ரமணி வரலே. இன்னிக்கு மாலுவும் ரங்கனும் வரலே! இதிலே ஏதோ மர்மம் இருக்கு."

"என்ன மர்மம் இருந்தா உனக்கும் எனக்கும் என்ன சுகந்தி... இருபத்தஞ்சு லட்சம் உனக்கும் எனக்கும் விழுலேன்னு சந்தோஷப்படு... பணம் பாஷாணம்னு பெரியவங்க சொல்லியிருக்காங்க," என்றான் இச்சா.

"உங்களுக்கு விழாத போது நீங்க வேறு எப்படி உங்களைத் தேற்றிக் கொள்ள முடியும்?" என்றாள் சுகந்தி.

அன்று இரவு பத்து மணிக்கு மயில்சாமி தன் வீட்டை நோக்கி நடந்தான். அவன் அதை நெருங்குவதற்கும், ஒருவன் வீட்டை விட்டு வெளியேறி, எதிர்த் திசையில் நடந்து செல்லுவதற்கும் சரியாக இருந்தது. அவன் யார் என்று மயில்சாமிக்குப் புரிந்து விட்டாலும், அதைப் பற்றிப் பேச இது சமயமில்லை என்று தன்னை அடக்கிக் கொண்டான்.

"என்னப்பா, எதுக்கு இப்ப இங்கே வந்திருக்கே?" என்று தனம் கேட்டாள். அவள் குரலில் எரிச்சல் ஒலித்தது.

"உனக்கு விசயம் தெரியுமாடீ?"

"இன்னா விசயம்?"

"உன் புருசன் வாங்கின லாட்டரிச் சீட்டுக்கு இருபத்தஞ்சு லட்சம் ரூபா விளுந்திருக்கு."

"அதுக்கு இன்னா இப்ப?"

"அப்ப? உனக்கு முன்னாடியே தெரியும்னு சொல்லு."

"ஆமாம் தெரியும். ஆனா, நான் ஏன் உன் கையிலே சொல்லணும்? நீ சாராயக்

கடையையே வாங்கிடுவியே!''

''துப்புக் கெட்டக் கழுதே... விசயம் புரியாம பினாத்தாதே... அந்தச் சீட்டை வித்த கடைக்காரன் சொல்றான், ரமணி தான் டிக்கெட்டை வாங்கினான்னு. புஸ்தகத்திலே வேறே அவன் பேரைக் குறிச்சு வைச்சிருக்கான்.''

''அடப்பாவி!''

''இப்ப இன்னா சொல்றே?''

''என் புருசன்தான் டிக்கெட்டு வாங்கினான். முந்தா நான் ராத்திரி ரமணி வூட்டுக்குக் கூடப் போனான். அந்த ஆளு ஊர்லேயே இல்லேன்னு திரும்பி வந்தான்.''

''இதெல்லாம் ஏன் என்கிட்ட சொல்லலே, நீ?''

''உன் கையிலே சொல்லத்தாவலேன்னு சொல்லலே... சொல்லியிருந்தா நீ இன்னா கிளிச்சிருப்பே?''

''இன்னிக்கு ரமணி ஆபீசுக்கு வரலே... உன் புருசனும் வரலே... மாலுன்னு ஒரு பொண்ணு இருக்கு... ரமணிக்கும் இந்தப் பொண்ணுக்கும் ரொம்ப நாளா சிநேகம். கல்யாணம் கட்டிக்கப் போறாங்க. இந்தப் பொண்ணு மாலுவும் இன்னிக்கு ஆபீசுக்கு வரல்லே.''

''இத்தையெல்லாம் ஏன்யா என் கையிலே சொல்றே? என் புருசன் டிக்கெட்டு வாங்கியிருக்கான். அதுக்கு இருபத்தஞ்சு லட்சம் வுளுந்திருக்கு. வேற எவனாவது இந்தப் பிரைஸ்லே கை வைக்க வந்தான், அவன், எவனா இருந்தாலும் சரி, என் கையிலே மாட்டிப்பான். அவனை நான் கொன்னுடுவேன்!'' என்றாள் தனம்.

''அப்பாலே, ஜெயில்லே இருபத்தஞ்சு லட்சத்தை எண்ணிப் பாப்பியாக்கும்... களுதைக்கு ஒடம்புதான் வளந்து கிடக்கு. மூளை இல்லே.''

''சரி, நீ போ ஆபீசுக்கு. நான் தூங்கணும்,'' என்றாள் தனம்.

''போறேண்டி களுதே... எதுக்கு மறுபடியும் அந்த ஆள் இங்கே வர்றான்?''

''உன் கையிலே சொல்லத் தாவலே!''

தனம் கதவை அறைந்து சாத்த, மயில்சாமி உறுமிக்கொண்டே நடக்கலானான்.

ரயிலில் மாலு நிம்மதியாக உறங்க, ரங்கன் பித்துப் பிடித்தவனைப் போல உட்கார்ந்திருந்தான்.

எதற்காகச் சேலம் போகிறான்?

ஏன் மாலு அழைத்துச் செல்லுகிறாள்?

ரமணிக்குச் சேலத்தில் என்ன வேலை?

பரிசு விழுந்த விஷயமே ரமணிக்குத் தெரியாதோ? அப்படி என்றால் இந்தப் பிரயாணத்துக்கும் பரிசுக்கும் சம்பந்தமில்லையா?

திடீரென்று ரங்கனுக்கு, அவனுடைய அண்ணனுடைய கல்யாணம் நினைவுக்கு வந்தது. அவன் பதிவுத் திருமணம் செய்து கொண்டான். ஓர் அதிகாரிக்கு முன்பு அண்ணனும் அண்ணியும் ஒரு ரிஜிஸ்தரில் கையெழுத்துப் போட்டார்கள். ரங்கன் ஒரு சாட்சிக் கையெழுத்துப் போட, அண்ணியின் உறவுக்காரன் ஒருவன் இன்னொரு சாட்சிக் கையெழுத்துப் போட்டான்.

இப்போது எல்லாம் புரிந்தது ரங்கனுக்கு.

சேலத்தில் ரமணியும் மாலுவும் பதிவுத் திருமணம் செய்து கொள்ளப் போகிறார்கள்.

அவன் சாட்சிக்கையெழுத்துப் போடப் போகிறான்!

திடீரென்று மனத்தில் ஒரு தெளிவு பிறந்தது. நிச்சயமாக ரமணிக்குப் பரிசு விழுந்த விஷயம் தெரியாது.

ரங்கன் நிம்மதியாய், ஆனந்தமாய்த் தூங்கினான்.

சேலம் வந்தது கூட அவனுக்குத் தெரியாது.

''எழுந்திரு, ரங்கா... எத்தனை தடவைதான் ரங்கா, ரங்கான்னு கத்தறது!''

மண்டையில் ஏதோ இடிப்பதை உணர்ந்து திடுக்கிட்டு ரங்கன் கண் விழித்தான். மாலுவின் பெட்டி, பூனை, தன் முன்மண்டையை வேண்டுமென்றே இடித்திருக்கிறது என்பதை அவன் புரிந்து கொள்ளவில்லை.

மாலு ரெயிலிலிருந்து இறங்க, அவன் அவசர அவசரமாய்ப் பின்தொடர்ந்தான்.

(தொடரும்)

---

''அவர் ரொம்பத்தான் வேலையோடு ஒன்றிட்டார்...''

''எப்படிச் சொல்றே?''

''முன்னே, பஞ்சவர்ணம்னு இருந்த அவரோட பெயரை லஞ்சவர்ணம்னு மாத்திக்கிட்டார்னா பாரேன்!''

— வி. சி. கிருஷ்ணரத்னம்.



# கல்வெட்டில் பெயர்

**உமா கல்யாணி**

"ஏழெட்டு வருஷமாப் பேசிக்கிட்டுத்தான் இருக்கோம். ஒண்ணுமேயும் நடப்பு இல்லே. இந்த வருஷமும் அது மாதிரிதான். அம்மன் கோவில் கொடைன்னு பேச்சு வர்றப்ப எல்லாம், இப்படி மண்டபம் கட்டுற பேச்சும் தவறாமதான் வந்துருது. அப்புறம் கொடை முடிஞ்சு ஆரவாரம் போன கையோட, இந்தப் பேச்சும் ஒஞ்சு போயிடுது" என்றார் பெரிய பாட்டா.

'கணீர்' என்று ஒலிக்கின்ற மணிக் குரல். அந்தக் காலத்து வலுவான கட்டை அல்லவா!

"பெரிய பாட்டா, இந்த வருஷம் அப்படி இல்லே. எப்படியாச்சும் வசூல் பண்ணி மண்டபம் கட்டிப்பிடவேண்டியதுதான். கர்ப்பக் கிருகத்தையும் விருத்தியாக் கட்டி, தென்புறம் கிடக்கிற இடல்லே பெரிய கல்யாண மண்டபமும் கட்டிட்டால் வசதியாய்ப் போயிடும். இப்படி அம்மன் கொடை கொடுக்கிறப்ப, கூட்டமெல்லாம் தங்கிக்க இடம் கிடைச்சிடும். வெயிலோ, மழையோ... ஜனங்க கஷ்டப் பட வேணாம். நம்ப ஊர்ல மட்டும் இல்லே, சுத்துப்பட்டி ஏழூர்ச் சனமும்....., ஒரு கல்யாணம் காட்சி பண்ணணும்னால், டவுன்ல்ல இருக்கிற மண்டபத்தைத் தேடில்லா ஓடுவாங்க. நம்ப ஊர்லயே வசதியாய் ஒரு மண்டபம்னு கட்டிட்டால்சனங்களுக்கும்வசதி. கோவிலுக்கும் வருமானம் கூடிரும். கொடை கூடக் குறைச்சுப் போட்டுக்கலாம்" என்றார் மாரிமுத்து.

"கல்யாண மண்டபம் கட்டுறது லேசில் நடக்குமா? எம்புட்டுத் தொகை வேணும் அதுக்கு? இருக்கிற பணம் பத்தாது. வரி போட்டாலும் காணாது" என்றார் தெய்வநாயகம்.

"தெய்வநாயகம் சொல்றது சரிதான். ரூபாய் நிறையத்தான் ஆயிரும். ரூபாய்க்கு என்ன பண்ணப் போறீங்க?" என்று கேட்டார் மாடசாமி.

ஒரு நிசப்தம் உண்டாகிப் பிறகு கலைந்தது. கூடியிருந்தோர் ஆளுக்கொரு யோசனை கூறினார்கள். ஆனால் எதுவும் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளத் தக்கதாக இல்லை.

"பெரிய பாட்டா, கோவில் மண்டப முகப்பிலே ஒரு கல்வெட்டுப் பதிப்போம். நன்கொடை தந்தவங்க பெயரை எல்லாம் அதிலே எழுதி வச்சிறலாம். அப்போதாவது நிதி தரமாட்டாங்களா?" என்றார் பெரிய நாயகம்.

"சரிதான் பெரியநாயகம். ஒருத்தன் அஞ்சு தருவான். ஒருத்தன் பத்துத் தருவான். ஒருத்தன் நூறு தருவான். இவங்க பெயரை எல்லாம் எழுதணும்னால், மண்டபச் சுவர் பூராவும் கல்வெட்டுப் பதிக்க வேண்டியது தான்." என்றார் பெரியபாட்டா.

"அப்படி எல்லார் பெயரையும் போட முடியுமா? ஓரளவு பெரிய தொகையாய்த் தர்றவங்களோட பெயரை மட்டும் போடணும்" என்றார் பெரியநாயகம்.

"பெரிய தொகைன்னா எவ்வளவு?" என்று கேட்டார் மாடசாமி.

"ஆயிரம் ரூபாயும் அதுக்கு மேலேயும் யாரெல்லாம் தர்றாங்களோ, அவங்க பெயரைக் கல்லிலே எழுதிடலாம்."

"ஆமாம். இப்படியே வச்சுக்கலாம். அப்பத்தான் பெயர் வரணும்னு ஆசைப்படுறவங்க நிறையத் தர்றதுக்கு முன் வருவாங்க. ஏதோ நூறு, இருநூறு தந்து ஒப்பேத்த எண்ணுறவங்க கூட ஆயிரம் தர முன் வருவாங்க. அதனாலே அப்படி ஒரு ரூலை வச்சுக்கலாம்" என்றார் பெரிய பாட்டா.

இதனை ஏகமனதாக அனைவரும் ஏற்றுக் கொண்டு தீர்மானமாகவும் போட்டு விட்டனர்.

"பாருங்க, வசூலை இப்பவே ஆரம்பிச்சிடலாம். நாளை பிறகுன்னு தள்ளிக்கிட்டே போனால் அப்புறம் அது தள்ளலாவே போயிடும்" என்றார் மாரிமுத்து.

"அப்படின்னா, முதமுதல்ல முருகேசம் பிள்ளையைப் போய்ப் பார்க்கலாம். அவர் தான் இதுக்குப் பிள்ளையார் சுழி போட்டு ஆரம்பிச்சு வைக்கட்டுமே..." என்றார் தெய்வநாயகம்.

"அவரென்ன கைராசிக்காரரா?" என்று கேட்டார் ராஜநாராயணன்.

ராஜநாராயணன் இப்போது இங்கு புதிதாய் வந்திருக்கிற ஸ்கூல் டீச்சர். அதனால் தான் முருகேசம் பிள்ளையின் இயல்பை அறியாதவராய்க் கேள்வி கேட்கிறார்.

"ஆமாம், அப்படியே வச்சுக்கலாம். ஏன்னா, நாம் முதல்ல போய்க் கேட்கிற நபரே அட்டி எதுவும் கூறாமல் தாராள மனசுடையவராய் இருந்தார்ன்னால் நல்லது இல்லியா! அவர் உடனே ஒப்புக் கொண்டு பணமும் தர்றஆள்" என்றார் தெய்வநாயகம்.

"அந்த ஆளுக்கு அப்படி ஒண்ணும் வாரி

வழங்குற தாராள மனம்னு சொல்லிட முடியாது. சுத்தமான விளம்பரப் பிரியர். தன்னோட பெயரைக் கல்லிலே பொறிச்சுக்க அத்தனை ஆசை. அதுக்காக மட்டும் தன்னோட இரும்புப் பெட்டியைத் திறக்கிற ஜாதி அவர்" என்றார் மாரிமுத்து.

"அந்தக் கவலை நமக்கேன் மாரிமுத்து? நமக்கு அவர் தரப் போகிற பணத்தோட அளவுதான் முக்கியம்..." என்று சிரித்தார் பெரியபாட்டா

"நானும் வேறென்ன சொன்னேன், அந்த ஆள் ஒரு விளம்பரப் பிரியர்னு சொன்னேன். ஏன்னா, இந்த வட்டாரத்திலே எங்கெங்கே கல்வெட்டு இருந்தாலும், அதிலே அவரோட் பெயரும் கண்டிப்பாய் இருக்கணும்னு எண்ணுகிறவர். அவரோட இந்த ஆசையை வச்சு, யார்... எங்கே.... என்ன காரியம் பண்ண ஆரம்பிச்சாலும் அவர்கிட்டே போய், அவரோட இந்தக் கல்வெட்டிலே பெயர் இருக்கணும்கிற ஆசையை வச்சுப் பெரிய தொகையாய் வாங்கிக்கிட்டுப் போயிடறாங்க..." என்றார் மாரிமுத்து.

"இப்ப நாமும் அதைத்தானே பண்ணப்போகிறோம்?" என்று சிரித்தார் பெரிய பாட்டா.

"கல்லிலே பெயரைக் காணும் ஆசையில் கண்ணை மூடிக்கிட்டே நிதியை அள்ளி வீசுகிறவர் அவர். போய் நல்லாப் பேசி, ஆளைக் குளிப்பாட்டி, பெரிய தொகையை வாங்கிட்டு வந்துருங்க," என்று சிரித்தார் ராஜநாராயணன்.

"அவரோட பட்டப் பெயரே கல்வெட்டுப் பைத்தியம் முருகேசம் பிள்ளைதானே!" என்று சிரித்தார் மாரிமுத்து.

"பொருத்தமான பெயர்தான்" என்று சிரித்தார் ராஜநாராயணன்.

அனைவரும் சிரித்தனர்.

"எப்படியோ அவர் பணம் நமக்கு வரணும். அவர் எந்த வகைப் பைத்தியமானால் என்ன! எல்லோரும் கிளம்புங்க!



இப்ப நல்ல நேரம். ராகு காலம் வர்றதுக்குள்ளே முதல் வசூலைப் பண்ணிட வேணும்.''

பெரியபாட்டா கூட அதை ஆமோதிக்கும் விதமாக அனைவரும் எழுந்து புறப்பட்டனர்.

பலித்தது.

"ஏதோ ஆயிரம் ரூபாய் மட்டுமே டொனேஷனாய்த் தருவார் என்று போனவர்கள் அப்படியே அசந்து போனார்கள்.

ஆறாயிரம் ரூபாயைக் கட்டுக் கட்டாகத் தூக்கிக் கொடுத்தாரே!

ஆயிரம் ரூபாய் ரசீதுகளில் ஆறினைப் பெற்றுக் கொண்ட அவர், ''என் பிள்ளைங்க பேர்ல அத்தனை நல்லெண்ணம் கிடையாது எனக்கு. ஒரு பயலாவது நேரான பாதையிலே வரமாட்டேன்றானுக. ஏன், நான் மட்டும் யோக்கியனா என்ன? நானும் என்னோட வாலிப வயசிலே இப்படித்தானே! துளுத்துக் கிடந்த பணத்தை அள்ளிக்கிட்டுப் போய் வம்பைத்தானே விலைக்கு வாங்கிட்டு வந்தேன்! ஆனால், என் முன்னோர் செய்த தர்ம காரியங்களை எல்லாம் அங்கங்கே கல்வெட்டுக்களில் பார்த்ததும்தான் எனக்கு விழிப்பு வந்துருச்சு. மனச்சாட்சி உறுத்த ஆரம்பிச்சிடுச்சு. இப்படிப்பட்ட மேலான நற்காரியங்களை எல்லாம் பண்ணிய மேற்குடிப்பிறப்பில் பிறந்த நானா, இத்தனை மோசமான செயல்களில் ஈடுபட்டிருக்கிறேன்னு எண்ணி வெட்கப்பட்டேன். வேதனைப்பட்டேன். குடும்பத்தின் நற்பெயரை அழிச்சிருக்கேனேன்னு தவிச்சு மனம் மாறிட்டேன். இப்படிப்பட்ட கல்வெட்டுக்களால்தானே என்னாலே திருந்த முடிஞ்சதுன்னு சந்தோஷப்பட்டேன். அதனாலே, தட்டுக்கெட்டுத் திசைமாறி அலைகிற என்னோட பிள்ளைகளும், என்னோட பெயரை இப்படிப்பட்ட நல்ல காரியங்கள் பண்ணினதாகக் கல்வெட்டுக்களிலே பார்த்தால், அதனாலே என்னைப் போல மனசு மாறித் திருந்தலாம் அல்லவா? அதனாலேதான் கல்லிலே பெயர் பொறிக்கிறதானால் முதல் ஆளாய் நின்னு டொனேஷன் கொடுக்கிறேன். அதுவும் இப்ப ஒரு படி மேலே போய், பிள்ளைங்க பெயரையும் கல்வெட்டில் போடும்படி அவங்க பேர்லயும் டொனேஷன் கொடுத்திட்டேன். தங்கள் பெயரைக் கல்வெட்டில் பார்க்கிறப்ப, இந்த நல்ல காரியத்துக்கு உதவின நாம், தப்பு எதுவும் பண்ணக் கூடாதுன்னு எண்ணித் திருந்தலாம் இல்லையா? ஊர்ல என்னைக் கல்வெட்டுப் பைத்தியம்னு சொல்றாங்களாம். சொல்லிட்டுப் போறாங்க. கெட்டவன்கிற பேரைவிட இது பெட்டராச்சே! இந்த அளவு கருத்து மாறியிருக்கே! இது எனக்கு வெற்றிதானே...!'' என்று கூறிச் சிரித்தார் முருகேசன் பிள்ளை.

வசூல் பண்ண வந்தவர்கள் பிரமித்துப் போனார்கள்.

---

## இருக்கவா—பறக்கவா?



உடன்பிறப்புமில்லாத உடம்பு பாழ் என்றவ்வை
ஓதிவைத்தாள் அந்நாளிலே!
ஒன்றோடு நிறுத்தென்றே ஓதுகின்ற அரசாங்கம்
உயிர்வாங்குது இந்நாளிலே!

கடனெதுவுமில்லாமல் கணக்கறிந்து வாழென்று
கூறிவைத்தார் அந்நாளிலே!
கலர் டீவி டெக்கென்றும் காத்ரேஜு ப்ரிட்ஜ் கேட்பாள்
கடைச்செல்வி இந்நாளிலே!

புடைவைநகை வாங்குதற்கும் புதுப்படங்கள் பார்ப்பதற்கும்
போய்விடுவாள் இந்நாளிலே!
பொருள்சேர்த்து வைத்ததனைப் புருஷனுக்கே தந்திடுவாள்
பெண்டாட்டி அந்நாளிலே!

அடலெருது போல் நானும் ஆலையிலே சுழன்று வரும்
அல்லலென்று திரும்பபனே!
ஆண்டியாகிச் சுற்றுதற்கும் அடர்காடு தமிழகத்தில்
ஆண்டவனே எங்குமில்லையே!

— எச். ரமணிக்லால்.

# ஆயுர் வேத முறையில் புற்று நோய்க்கு சிகிச்சை



நான், கமலாநாகராஜராவ் 'W/o R. Nagaraja Rao Retired Chief Manager, Union Bank of India at Bangalore) கியானகாலோஜிஸ்டை 'Gynaecologist) சந்தித்த பொழுது அவர் என்னை பம்பாயில் உள்ள புற்று நோய்க் கழகத்தை, சொவிக்ஸ் புற்றுநோய் இருப்பதால், பார்க்கச் சொன்னார். நானும் புற்று நோய் சிகிச்சைக்காக இந்தியாவில் உள்ள சில புற்று நோய் மருத்துவமனையில் சிகிச்சை பெற்றுக் கொண்டேன். ஆனால் எந்தவிதமான முன்னேற்றமும் தெரியவில்லை.

1977 டிசம்பர் மாதத்தில் ஒரு சிலரால் மிகவும் வெற்றி கரமாக பல புற்று நோய் உள்ளவர்களை தனது சிகிச்சையின் மூலம் குணப்படுத்திவரும் ஹைதராபாத்தில் கேன்ஸர் இன் பர்மரி டாக்டர் பாபுராவ் அவர்களை பற்றி தெரியவந்தேன். உண்மையில் ஹைதராபாத்தில் உள்ள எனது சில நண்பர்களிடம் விசாரித்தேன், அவர்கள் கொடுத்த தைரியத்தினால் டாக்டா பாபுராவ் அவர்களிடம் சிகிச்சை பெற்றுக் கொண்டேன். பூரண சிகிச்சை முடிந்தவுடன் நான் கியானகாலோஜிஸ்டை பார்த்தேன். அவர் எனது நிலைமையை பூரணமாக குணம் ஆனது கண்டு மிகவும் சந்தோஷப்பட்டார். மேலும் புற்று நோய் இருப்பதற்கான எந்த அறிகுறியும் இல்லை என்று சொன்னார். இப்பொழுது நான் நல்ல ஆரோக்கியத்துடன் இருக்கிறேன்.

## டாக்டர் பாபுராவ்

புற்று நோய்க்கு சிறந்தமுறையில் சிகிச்சை செய்து அவர்களுக்கு மறு பிறவி கொடுக்கிறார்.

கமலா நாகராஜராவ்
ஆர். கமலம்மா
1224, 34-வது கிராஸ் ஜெயநகர்,
பெங்களூர்

### கால அட்டவணை

| விலாசம் | போன் நம்பர் | பார்க்கும் கிழமைகள் |
|---|---|---|
| டாக்டர் பாபுராவ்—வீடு<br>கேன்ஸர் இன்பர்மரி<br>2-1610 செடம்ரோடு, மொமுலாகூடம்<br>ஜெகதாம்பா பெட்ரோல் பங்க் அருகில்<br>குல்பார்கா (கர்னாடகா) | 21452 | பிரதி<br>திங்கள்<br>செவ்வாய்<br>மாத்திரம் |
| ஹோட்டல் மிட் டவுன்<br>அன்டேரி (மேற்கு)<br>ரயில்வே ஸ்டேஷன் எதிரில்<br>பம்பாய். | 6288882<br>6286635 | பிரதி<br>புதன் |
| கேன்ஸர் இன்பர்மரி<br>1-1-271/3 சிக்கட்பள்ளி<br>பஸ் ஸ்டாப் அருகில்<br>ஹைதராபாத் - 500 020. | 64735 | பிரதி<br>வெள்ளி |
| C/o ராம் இண்டாநேஷனல்<br>114, கோடம்பாக்கம் நெடுஞ்சாலை,<br>சென்னை 600 034. | 473350<br>473420 | பிரதி<br>சனி |
| C/O. ஹோட்டல் பிருந்தாவன்<br>மஹாத்மா காந்தி ரோடு,<br>பெங்களூர். | 573271 | பிரதி<br>ஞாயிறு |

# பங்குத்

**பு**வனாவுக்கு வேலை போய் விட்டது. கிட்டத்தட்ட மாதம் இரண்டாயிரம் ரூபாய் வாங்கிக்கொண்டிருந்தாள். அவள் பணிபுரிந்த நிறுவனத்தின் உரிமை கை மாறியதில், நிர்வாகம் தமக்கு வேண்டியவர்களை மட்டும் இருத்திக் கொண்டு மற்றவர்களை வீட்டுக்கு அனுப்பி விட்டது. தனியார் நிறுவனம் ஆகையால் எதுவும் செய்ய முடியவில்லை.

புவனாவின் அப்பா சுவாமிநாதன் புதிய நிர்வாக டைரக்டர்களிடம் கெஞ்சிப் பார்த்தார். அவருக்கு மாதாந்திர பென்ஷன் ஐந்நூறு ரூபாய் வந்தது. இதை வைத்துக் கொண்டு, மூன்று பெண்கள், இரண்டு பிள்ளைகள் உள்ள குடும்பத்தை எப்படி நடத்துவது எனக் கேட்டார். புவனா கொண்டு வந்த சம்பளம் நின்று போனால், குடும்பம் நடுத் தெருவிற்கு வந்து விடும் எனப் புலம்பினார்.

''சம்பளத்தில் வேண்டுமானால் ஐந்நூறு ரூபாய் குறைத்துக் கொள்ளுங்கள். வேலையை விட்டு விலக்காதீர்கள்'' என மன்றாடிப் பார்த்தார்.

நிர்வாகம் அவருக்கு அனுதாபம் தெரிவித்ததே தவிர, புவனாவை மீண்டும் வேலைக்குச் சேர்த்துக் கொள்ளவில்லை.

**பு**வனா இருபது வயதில் பி.காம். பாஸ் செய்தவுடன் வேலைக்குப் போக ஆரம்பித்தாள். இப்போது அவளுக்கு வயது இருபத்தெட்டு.

பெரிய பிள்ளை மூர்த்தி வேலையில் இருந்தான். மெடிகல் ரெப்ரெஸென்டெடிவ். தினப்படியே நூறு ரூபாய் வந்தது. வீட்டுக்காக மாதம் ஐந்நூறு ரூபாய்க்கு மேல் ஒரு பைசா தர மாட்டான். அதில் பெரும் பகுதி அவனுக்காக வாங்கும் சோப், பவுடர் மற்றும் அலங்காரப் பொருள்கள் வாங்குவதற்கே சரியாகி விடும்.

அடுத்தவன் சேகர். எந்த வேலையிலும் தொடர்ந்து ஆறு மாதம் இருந்ததில்லை. ஏதாவது வாக்குவாதம், தகராறு. அதிகப் பிரசங்கித்தனமான பேச்சு. 'நீயா, நானா?' என்ற வறட்டு ஜம்பம். அவர்களாக விரட்டியது பாதி. இவனே உதறி விட்டு வந்தது மீதி.

புவனாவுக்கு அடுத்தவள் சந்தியா. பி.எஸ்.ஸி., படித்து விட்டு வீட்டோடு சும்மா உட்கார்ந்திருக்கிறாள். மனத்திற்குள் ஒரு கர்வம். வீட்டில் எல்லோரையும் விட அவள் நல்ல நிறம், அழகும் கூட. பத்துக் குழந்தைகளுக்குக் காலையும் மாலையும் பாடம் சொல்லிக் கொடுத்தால் கூட மாதம் ஐந்நூறு ரூபாய்க்கு மேல் சம்பாதிக்கலாம். பாவம்... அவளுக்கு ஏது நேரம்? மாடியில் குடித்தனம் இருப்பவர்கள் சொந்தமாக 'வீடியோ' கடை வைத்திருந்தார்கள். தினம் தினம் புதுப் புது சினிமா காஸெட்டுகள் வரும். அவற்றைப் பார்ப்பதற்கும் டஜன் கணக்கில் வரும் வாராந்திர மாதாந்திர சஞ்சிகைகளைப் படிக்கவுமே நேரம் இல்லை.

கடைசிப் பெண் காவேரி. இப்போது தான் பி.எஸ்.ஸி., சேர்ந்திருக்கிறாள். விளையாட்டாகட்டும், வேறு எந்தப் போட்டியாகட்டும், முதல் நிற்பாள். அவள் வாங்கியுள்ள பரிசுப் புத்தகங்கள் வைக்கத் தனி அலமாரி வேண்டியிருந்தது. ஆனால் அப்படிப் போன இடங்களில் போக்குவரத்துச் செலவுக்கும், குடும்பத்துக்கு வாங்கி வந்த பொருட்களுக்கும் புவனாவைத் தானே எதிர்பார்க்க வேண்டி வந்தது?

''இப்போது என்ன செய்வது?'' — தாய் பங்கஜம் ரொம்பக் கவலைப்பட்டாள்.

''எட்டு வருஷம் வேலை செய்திருக்கிறாயேடி... ஏதாவது பிராவிடண்ட் ஃபண்டு, கிராஜுவிடி என்று மொத்தமாக...''

''எங்கேம்மா பணம் சேர விட்டோம்...! தீபாவளிக்கு, பொங்கலுக்கு, உங்கள் காசி யாத்திரைக்கு, அப்பா கண் ஆபரேஷனுக்கு எல்லாவற்றையும் துடைத்து எடுத்தாகி விட்டது.''

பாவம்... அவளைச் சொல்லிக் குற்றம் இல்லை. வேலை போன இந்த ஒரு மாதமாக தினமும் காலையில் ஒரு பிடி சாப்பிட்டு விட்டு வேலைக்காக அலைந்தாள், அலைந்தாள் அப்படி அலைந்தாள். மாதம் முந்நூறுக்கும், நானூறுக்கும்தான் வேலை கொடுப்பதாகச் சொன்னார்கள். அதுவும் தற்காலிகமாக. புவனா இன்றும் முயன்று கொண்டுதான் இருந்தாள்.

வேலையை விட்டு அனுப்பும் போது, மூன்று மாத முன்னறிவிப்புத் தராததற்காக, மூன்று மாதச் சம்பளம் ஆறாயிரம் ரூபாய் கையில் கொடுத்தார்கள். எத்தனை நாளைக்கு வரும்?

தங்கள் தேவைகளை எத்தனை சுருக்கிக் கொண்டாலும் ஐந்து மாதங்களுக்கு மேல்

ஜனனி

வராது.

இரண்டாம் மாதம். வீட்டின் நிலைமையை விளக்கிப் பெரிய பிள்ளை மூர்த்தியிடம் கூடப் பணம் கேட்டார் சுவாமிநாதன். அவன் சரி என்றும் சொல்லவில்லை. மறுக்கவும் இல்லை.

நான்காம் நாள் தன் பெட்டி படுக்கையை எடுத்துக் கொண்டு புறப்பட்டு விட்டான். அவனுக்குக் கோயம்புத்தூர் மாற்றலாகி விட்டதாம். ''கவலைப்படாதே அம்மா! எங்கேயிருந்தாலும் நான் மாதம் அந்த ஐந்நூறு ரூபாய், கடைசி வரை அனுப்புவேன்,'' என்றான்.

இரண்டாவது பிள்ளை சேகர் தானாக நிலைமையைப் புரிந்து கொண்டான். இப்படி நிரந்தரமான வேலை இல்லாமல் இருந்தால் அம்மாவும் அப்பாவும் பேசியே 'கொன்று' விடுவார்கள். பெங்களூரில் ஒரு இண்டர்வியூ இருக்கிறது எனச் சொல்லி, ஆயிரம் ரூபாய் முன் பணத்துடன் போனவன் பிறகு கடிதமே போடவில்லை.

சந்தியாவுக்குச் சினிமா போக ரூபாய் கிடைப்பது சிரமமாகப் போயிற்று. தானாகவே இரண்டு பேருக்குப் பாடம் சொல்லித் தர ஆரம்பித்தாள். மாதம் நூறு ரூபாய். முதன் முதலாக அந்தப் பணத்தைக் கையில் வாங்கியதும் உற்சாகம் பிறந்தது. இன்னும் நான்கு பேரைச் சேர்த்துக் கொண்டாள். நான்காம் மாதம் காலையிலும், மாலையிலும் 'பள்ளிக் கூடமே' நடத்த ஆரம்பித்து விட்டாள். கிட்டத்தட்ட எண்ணூறு ரூபாய் வந்தது. வீட்டிற்கு ஐந்நூறு ரூபாய் கொடுத்து விட்டு முந்நூறு ரூபாயைச் சேமிக்கத் தொடங்கினாள். இனி யாரிடமும் தன் துணிமணிகள் வாங்கக் காசுக்காகக் கையேந்த வேண்டியதில்லை.

காவேரிக்கும் பொறுப்பு தெரிய ஆரம்பித்தது. வெளியே போவதைக் குறைத்துக் கொண்டாள். அப்படி எந்தப் போட்டியில் கலந்து கொண்டாலும், வருமானம் இல்லாவிட்டாலும் கூட 'கையை'க் கடிக்காமல் இருக்கிறதா என்பதில் கவனமாக இருந்தாள்.

குடும்பம் இப்பொழுதும் தள்ளாடத்தான் செய்தது.




**சு**வாமிநாதன் தபால் ஆபீஸில் மேலாளராக இருந்து ஓய்வு பெற்றவர். வேலையில் இருந்த போது அசாத்திய கண்டிப்பு. ''சிடுமூஞ்சிச் சாமி'' என்ற பட்டப் பெயர் வாங்கியவர். அவருடன் பணியாற்றி ஓய்வு பெற்றவர்கள் எல்லாம், தபாலாபீஸில் மறுபடியும் நாள் சம்பளத்தில், விடுப்பு எடுப்போருக்குப் பதில் வேலை பார்க்கிறார்கள். ஒரு நாளைக்குக் கிட்டத்தட்ட நாற்பது ரூபாய் கிடைக்கும்.

''என் ஜூனியர்கிட்ட நான் சலாம் போட்டு வேலை பார்க்க மாட்டேன்!'' என இத்தனை நாள் ஜம்பம் பேசியவர் தோட்டக்

கண்காணிப்பாளர் கால்களில் விழுந்து, தனக்கு ஓர் இடம் தேடிக் கொண்டார். கிட்டத்தட்ட ஆயிரம் ரூபாய் பார்க்க முடிந்தது.

விலைவாசி உயரும் வேகத்தில், இப்போதும் 'தொட்டுக் கொள், துடைத்துக் கொள்' என்ற நிலைதான்.

சுவரோடு சுவராகக் கிடந்த தையல் மெஷினுக்கு எண்ணெய் போட்டாள் பங்கஜம். கேவலம் ஐந்து ரூபாய்க்காக யார் இடுப்பு ஒடிய உட்கார்ந்து தைப்பது எனப் பேசியவள், அந்த ஐந்து ரூபாய் ஒரு நாள் காய்கறி வாங்க உதவும் என்பதைப் புரிந்து கொண்டாள். தெரிந்தவர்கள், அறிந்தவர்கள் மூலமாகப் பெண்களுக்கு ஜாக்கெட், பாவாடை, உள்ளாடை தைத்துக் கொடுக்க ஆரம்பித்தாள்.

இப்போது வீட்டில் புவனாவைத் தவிர எல்லோருக்கும் ஒரு வேலை இருந்தது. பம்பரமாகச் சுற்றினார்கள்.

இத்தனை நாட்கள் வீட்டிற்காக வெளியே உழைத்த புவனா இப்போது வீட்டில் குடும்பத்தாருக்காக வேலை செய்ய வேண்டி வந்தது.

காலை நாலரை மணிக்கு எழுந்திருந்தால் இரவு பதினோரு மணிக்குப் படுக்கப் போவாள்.

வேலை தேடி அலையக் கூட இப்போது நேரம் இல்லை!

ஆறு மாதங்களுக்குப் பின்...

ஒரு ஞாயிற்றுக் கிழமை காலை, மாடி வீட்டு டி.வி.யில் எல்லோரும் ''மஹாபாரதம்'' பார்த்து விட்டு வந்திருந்தார்கள்.

வாசலில் ஒரு கார் வந்து நின்றது.

நடுத்தர வயதைத் தாண்டிய ஒரு தம்பதி உள்ளே நுழைந்தார்கள். அவர்கள் யாரென்று தெரியாமல் குழம்பிய சுவாமிநாதன் ''வாருங்கள்!'' என வரவேற்றார்.

ஒரு பெரிய தாம்பாளத்தில் விதவிதமாகப் பழங்கள், வெற்றிலை, பூ, மஞ்சள் மற்றும் ஒரு பட்டுப் புடைவைப் பெட்டியையும் வைத்துக் கொண்டு வந்திருந்தார்கள்.

''என் பெயர் சிவராமன். இவள் என் மிஸஸ் கௌரி. நல்ல விஷயமாகத்தான் வந்திருக்கிறோம். உங்கள் வீட்டில் சம்பந்தம் வைத்துக் கொள்ளலாம் என்ற எண்ணம்.''

''என் பிள்ளை இதைப் பற்றி ஒன்றும் எழுதவில்லையே!'' என்றார் சுவாமிநாதன்.

''உங்கள் பிள்ளைக்குத் தெரியாது. நாங்கள் வந்தது உங்கள் பெண் புவனாவைப் பெண் கேட்க, என் பிள்ளை சுரேஷுக்காக.''

''புவனாவுக்கா? கல்யாணமா? நாங்கள் அதைப் பற்றி நினைக்கவேயில்லையே'' எனத் தடுமாறினார் சுவாமிநாதன்.

கல்யாணம் என்றால் விளையாட்டா? இப்போதுதான் குடும்பம் எழுந்து நிற்க

ஆரம்பித்திருக்கிறது.

''நாம் என்ன நினைக்கிறது? குரு பகவான் நினைத்து விட்டான். வேளை கூடி வந்திருக்கிறது. என் பிள்ளை சுரேஷுக்கு உங்கள் பெண்ணைப் பிடித்துப் போய் விட்டது. சுரேஷ் வேறே யாரும் இல்லை. உங்கள் பெண் வேலை பார்த்த கம்பெனியில் இப்போது மானேஜிங் டைரக்டர். என் ஒரே பிள்ளை...''

''இப்படித் திடீரென்று வந்து...'' — சுவாமிநாதன் தயங்கினார்.

''திடீர் முடிவு இல்லை. ஆறு மாதமாகக் காத்திருக்கிறோம். எங்களுக்குப் பணம் காசு பெரிதில்லை. பகவான் எங்களுக்கு அதில் குறை வைக்கவில்லை. புவனாவைப் பற்றி, அவள் அழகு, குணம், நடத்தை பற்றி எங்களிடம் அவன் சொன்னான். நாங்கள் மறுக்கவில்லை. எதற்கும் அவளை ஒரு வார்த்தை கேட்டு விடு என்றேன். உங்கள் பெண் சுரேஷிடம் தன் குடும்ப நிலையை விளக்கினாளாம். தனக்குப் பெரிய பொறுப்பு இருப்பதாகவும் கல்யாணத்தைப் பற்றி நினைக்கவே முடியாது என்றும் சொல்லி விட்டாளாம்.''

சுவாமிநாதன் தலையைக் குனிந்து கொண்டார்.

''மிஸ்டர் சுவாமிநாதன், நான் புதியவன். இருந்தாலும் ஒரு விஷயத்தைச் சொல்லித்தான் ஆக வேண்டி இருக்கிறது. குடும்பம் என்பது ஒரு பல்லக்கைப் போல். ஒருவன் தலையில் தூக்கி நடக்க முடியாது. நான்கு பேர் வேண்டும். அதுவும் தோள் மாற்ற ஆள் வேண்டும். உங்கள் பெண் மேல் இரக்கம் வந்தது. உங்களுக்கும் பொறுப்பு வர வேண்டும். அதற்காக, நான்தான் புவனாவை வேலையை விட்டு அனுப்பச் சொன்னேன்.''

சுவாமிநாதன் இன்னும் தயங்கத்தான் செய்தார்.

''இதோ பாருங்கள். யோசிக்காதீர்கள். நாங்கள் புவனாவை ஏற்கெனவே பார்த்திருக்கிறோம். ஒரு சம்பிரதாயத்திற்காகத்தான் நாங்கள் இங்கே வந்தது. செலவைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். புவனா கட்டிய புடைவையுடன் வந்தால் போதும் என்று என் பிள்ளை சொல்லவில்லை. அவள் கட்டிக் கொண்டு வர புடைவையே கொடுத்திருக்கிறான் பாருங்கள்!'' எனச் சிரித்தார் சிவராமன்.

''இதெல்லாம் புவனாவுக்குத் தெரியுமா?''

''தெரியாது. இப்போது கூட அவள் மறுப்புச் சொல்ல மாட்டாள் என்ற நம்பிக்கையுடன்தான் வந்திருக்கிறோம்'' என்றார் சிவராமன்.

புவனா வெளியே வந்தாள். வந்தவர்களை நமஸ்கரித்தாள்.

''அம்மா! அப்பாவைத் தாம்பாளத்தை வாங்கிக் கொள்ளச் சொல்!'' என்றாள்.




## வட்டமேஜை

# "கார்ட்டூன் சொல்வதுதான் உண்மை!"

• சௌதாலா செய்த மாபெரும் தவறு என்பதை உணர்ந்து அதனால் தேவிலாலுக்குத் தம்முடைய மறைமுக ஆதரவை நிறுத்திக் கொண்ட ராஜீவைப் பாராட்டிய இவ்வாரத் தலையங்கம் அற்புதம்!

சங்கராபுரம். கே. மகேஷ்.

• மேகம் தொகுதியில் சுயேச்சை வேட்பாளர் அமீர்சிங் கொலை செய்யப்பட்டதை வன்மையாகக் கண்டித்துப் பேசிய ராஜீவ் காந்தி, சட்டம் ஒழுங்கு நிலையைப் பாதுகாக்கத் தவறிய அந்த மாநில முதல்வர் சௌதாலா தார்மீகப் பொறுப்பேற்று ராஜினாமாச் செய்ய வேண்டும் என்று கோரியது ஏற்கப்பட்டு விட்டது. ஆனால், கடந்த நாடாளுமன்றத் தேர்தலின் போது இவர் போட்டியிட்ட அமேதி தொகுதியில் வரலாறு காணாத வன்முறைகளும், வாக்குச் சாவடிகள் கைப்பற்றல்களும் நடந்தனவே. சஞ்சய்கான் சுடப்பட்டாரே. அவற்றுக்கு இவர் பொறுப்பேற்றுத் தமது பதவியை ராஜினாமா செய்ய முன்வருவாரா என்று பிரதமர் வி. பி. சிங் கேட்டதற்குப் பதில் சொல்லாமல் ஓடி ஒளிந்து கொண்டது ஏனோ?

சிறுமுகை. ஸ்ரீ. கதிரேசன்.

• பொது மருத்துவமனைக்கு வருபவர்களிடம் கைவரிசை காட்டும் கயவர்களை மருத்துவமனைக்குள்ளேயே இருக்கும் காவல் நிலையத்தாலும் கட்டுப்படுத்த இயலவில்லை என்பது அவமானத்திற்குரிய விஷயம்.

சென்னை — 82. எஸ். யோகலிங்கம்.

• கவிதைக்குள் கவிதை இல்லாக் குறையை அடியார்க்கு நல்லானின் 'ஆசைகள்' கவிதை நிவர்த்தி செய்து விட்டது.

ஆவடி. க. கோபி.

• 'மான்' அவர்களின் அண்மைக் கால நடவடிக்கை கண்டு, அவர் மீது தவறான அபிப்பிராயம் ஏற்பட்டது. ஆனால் உங்களது அட்டைப் படக் கட்டுரையின் மூலமாக, அவரது உண்மையான வாழ்க்கை நிலையைப் புரிந்து கொள்ள முடிந்தது. மீண்டும் அவர் அஹிம்சை வழி கடைப்பிடித்துத் தமது நாடாளுமன்ற உறுப்பினர் பதவியேற்று பஞ்சாபுக்குச் சிறந்த சேவை செய்ய வேண்டும்.

மதுரை — 7. எஸ். திருமலை.

• குடும்பத்தில் சில கஷ்டங்கள் ஏற்பட்டாலே நம்மில் பலர் திசை மாறி விடுகிறார்கள். ஆனால் மானோ இவ்வளவு கொடுமைகளை அனுபவித்த பின்னரும் அஹிம்சையில் நம்பிக்கை கொண்டிருந்தார் என்பதை அறிந்ததும் நெகிழ்ந்து போனேன். பத்திரிகைகளில் அவரைப் பற்றி அதிகம் கேள்விப்படாத நான் தங்கள் கட்டுரையின் மூலமாக அவரைப் பற்றிய முழு உண்மையையும் அறிந்து கொண்டேன். ஆனால் வருத்தம் என்னவெனில் அவரது தற்போதைய நடவடிக்கைகள் புரியாத புதிராக இருப்பதுதான். இவரைப் போன்றவர்களால்தான் பஞ்சாப் சீரடையும் என்ற நிலையில் இவர் இவ்வாறு நடந்து கொள்வது மிகவும் வருந்தத்தக்கது ஆகும்.

மதுரை. ஜி. எம். ஜனார்த்தனன்.

• டீன் ஏஜ் பிரச்னைகளை மட்டும் கூறாமல், அவற்றைச் சமாளிப்பது எப்படி என்று பல அறிவுரைகளைக் கூறியது உபயோகமுள்ளதாக இருந்தது. பெற்றோர் — குழந்தைகள் இருவருக்கும் நடுவே எவ்வாறு அணுகுமுறைகள் இருக்க வேண்டும் என்பதையும் கட்டுரை அறிவுறுத்தியது. மொத்தத்தில் எங்களின் பிரச்னைகளை நீங்கள் புரிந்து கொண்டதோடல்லாமல் அவற்றை உரியவர்கள் அனைவரும் புரிந்து கொள்ள வழி வகுத்த உங்களுக்கு இளைய தலைமுறையின் சார்பாக வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறேன்.

சென்னை — 39. அ. க. கிருஷ்ணன்.

• டீன் ஏஜ் பிரச்னையில் சிக்கித் தவிப்பவர்களுக்கு, நல்ல பல ஆலோசனைகளை வழங்கியது கட்டுரை.

தோட்டக்குறிச்சி. இரா. வளையாபதி.

• இவ்வாரக் கல்கியின் கடைசி கார்ட்டூன் வேதனை தரத்தக்க விஷயத்தை நகைச்சுவையுடன் சொல்லியிருக்கிறது! கார்ட்டூன் சொல்வதுதான் உண்மை!

மேல்பட்டி. எம். வி. வெங்கடேஸ்வரன்.

• புரட்சித் தலைவரின் நினைவு இல்லத்தை மக்களுடன் கலந்து பார்த்து எழுதிய முதல் பத்திரிகை கல்கியாகத்தான் இருக்கும். சபாஷ்!

மாப்பிள்ளைக்குப்பம். சி. முருகேசன்.

• தமிழ் நாட்டில் சினிமா மாயை நீங்கும் வரையில், எம். ஜி. ஆர். படத்துக்கு முத்தம் கொடுப்பதும், அவரது சிலைக்குக் கற்பூரம் காட்டுவதும் போன்ற மூடநம்பிக்கைகள் மாறாது.

தக்கோலம். மொ. சையத் அப்துல் காதர்.

• தமிழக இ. காங்கிரஸின் குடுமி ஜெயலலிதாவின் கையில் இருக்கும் வரை தற்போதைய தலைவர் வாழப்பாடியாரை மேலிடம் மாற்றாது என்பதில் எள்ளளவும் சந்தேகம் கிடையாது!

கும்பகோணம். எஸ். வி. ரவி கணேஷ்.

• கருத்து கலைந்து போன தாம்பத்யத்தின் பாதிப்பிற்குள்ளாகி மனம் புழுங்கித் தவிக்கும் ஓர் இல்லத்தரசியை அவளுடைய விதவைக் கோலம் அதிகம் பாதித்து விடவில்லை என்ற யதார்த்தங்களை 'இருட்டில் இருந்தவள்' சிறுகதை வெளிச்சமாக்கி விட்டது.

ஸ்ரீரங்கம். ஆர். கோபாலன்.

• 'பரோபகாரி' கதையானாலும் என் மனத்தில் ஊசியை எடுத்துத் தைத்தது போல் இருந்தது. கதையின் இறுதியில் சங்கரன் மனம் மட்டும் துடிக்கவில்லை; எங்கள் மனமும் துடிதுடித்து விட்டது.

தக்கோலம். அ. முஸ்தபா.

• 'மின்னலாய்ச் சில இலட்சியங்கள்' சிறுகதையில், சராசரி மனிதனுள் லட்சியம் என்பது எப்படி அவ்வப்போது சுடர் விட்டு மறைகிறது என்பதைத் தீக்குச்சிச் சுடரை வைத்து, சிம்பாலிக்காய்ச் சொல்லியுள்ள விதம் ரசிக்க வைத்தது.

காட்டூர். எம். அருள்மொழி.

# டயபிடீஸ் ஒழிய நாற்பது நாள்!

நீரிழிவு வியாதி என்பார்கள். ஆங்கிலத்தில் டயபெடிஸ் என்று கூறுவார்கள். சிறுநீரில் சர்க்கரைச் சத்து கலந்து வெளியேறுவது இதன் அறிகுறி. ரத்தப் பரிசோதனையில் சர்க்கரையின் அளவு அதிகமாகக் காணப்படும். அடிக்கடி சிறுநீர் பிரியும். உடல் இளைக்கும். சிலருக்குத் தலை சுற்றும். உடலில் காயமோ புண்ணோ ஏற்பட்டால் இலேசில் ஆறாது.

சரீர உழைப்பு உள்ளவர்களுக்கு டயபெடிஸ் வியாதி வராது என்பது கவனிக்க வேண்டிய விஷயம். மேஜை முன் நாற்காலியில் உட்கார்ந்து உடல் அலுங்காமல் வேலை செய்வோருக்குத்தான் வருகிறது. இதிலிருந்தே தேகப் பயிற்சி எவ்வளவு முக்கியம் என்பது தெரியவரும். மற்றொன்று ஆகார நியமம்.

'ஒருவேளை உண்பான் யோகி, இருவேளை உண்பான் போகி, மூன்று வேளை உண்பான் ரோகி' என்று வசனம் கூறுவார்கள். நம்மில் பலர் நாலு, ஐந்து வேளை கூட சாப்பிடுகிறோம். சாப்பாடு என்றில்லாவிட்டாலும் எதையாவது கொறிக்கிறோம். இதைத் தவிர்த்து நாக்கைக் கட்டுப்படுத்தி இரண்டு வேளை ஆகாரத்துடன் நிற்க வேண்டும். முடியவில்லையெனில் ஒரு வேளை மட்டும் சற்று அதிகமாகவும் இரு வேளைகளில் மிகக் குறைவாகவும் சாப்பிடலாம்.

என்ன சாப்பிடுகிறோம் என்பதும் முக்கியம். காலை எழுந்தவுடன் காப்பி; அப்புறம் செகண்ட் டோஸ் காப்பி. பிறகு டிபனுடன் காப்பி. ஆபீஸில் லஞ்சுக்கு முன்னால் பதினோரு மணி காப்பி. லஞ்ச் டயத்தில் டிபன் சாப்பிட்டால் கூடவே ஒரு காப்பி. பிற்பகல் காப்பி. மாலை நண்பர் வீட்டுக்குப் போனால் அங்கே 'ஒரு வாய்' காப்பி என்று சாப்பிடுகிறவர்கள் பலர் உள்ளனர். இம்மாதிரி காப்பி — டீக்கு அடிமையாவது நரம்புகளைத் தேவைக்கதிகமாகச் செயற்கையாகத் தூண்டி விடுவதில் சீக்கிரமே அவை பலவீனப்பட்டுப் போகும். தவிர, வேறு பல உபாதைகளும் வரும். இதையெல்லாம் தவிர்க்க ஆரோக்கியமான உணவை அளவுடன் சாப்பிடுவதுதான் நல்லது.

ஆகாரத்தில் உள்ள சர்க்கரைப் பொருளை மாற்ற பான்கிரியாஸ் என்ற உறுப்பிலிருந்து இன்ஸுலின் என்னும் திரவம் உற்பத்தியாகி ரத்தத்தில் கலக்கிறது. இந்த இன்ஸுலின்தான் ரத்தத்தில் சர்க்கரைச் சத்தின் அளவைச் சரியான நிலையில் வைத்திருந்து கட்டுப்படுத்துகிறது. பான்கிரியாஸ் என்ற உறுப்பு வயிற்றுப் பகுதியில்

* தனுராசனம் உச்ச கட்டம்: குமாரி சாமுண்டேசுவரி. படம்: உத்ரா: முடிந்தால் இந்த அளவுக்குச் செய்யலாம். சென்ற இரு நிலைகளே கூடப்போதும்: நல்ல பலன் தரும்.





"பயங்கரம் பயங்கரமாக் கனவு வருது டாக்டர்!"

"அப்படி என்ன கனவு கண்டீங்க?"

"காஷ்மீர்லே நான் கவர்னர் ஆகிற மாதிரி!"

— தஞ்சை ஆதிநாராயணன்.

உள்ளது. இந்தச் சுரப்பி சரியாக இயங்கி போதிய அளவில் இன்சுலின் உற்பத்தி செய்யவில்லையானால் நீரிழிவு நோய் உண்டாகிறது. அப்புறம் இன்சுலினை ஊசி மூலம் ஏற்ற வேண்டும்; மருந்து மாத்திரைகளை விழுங்க வேண்டும்.

சிலருக்கு இந்த டயபெடீஸ் பாரம்பரை வியாதியாக வந்து சேரும். வேறு சிலர் உடலுழைப்பு இல்லாததாலும் ஆகார விஷயத்தில் கட்டுப்பாடு இல்லாததாலும் தாங்களே வரவழைத்துக் கொள்கிறார்கள். அரிசிச் சோறிலேயே சர்க்கரைச் சத்து நிறைய உண்டு. அது போதாததற்கு இனிப்புத் தின்பண்டங்களைச் சிலர் நாக்கைச் சப்புக் கொட்டிக் கொண்டு தாராளமாகவே சாப்பிட்டு விடுவார்கள். டீ, காப்பி போன்றவற்றை அடிக்கடி அருந்தும்போது ஒவ்வொரு தடவையும் சர்க்கரை சேர்கிறது. இதையெல்லாம் யோசித்துப் பார்த்துத் தவிர்த்து முன்னெச்சரிக்கையுடன் நடந்து கொண்டால் டயபெடீஸ் வராது.

இந்த முன்னெச்சரிக்கை இரண்டு வகைப்படும். ஒன்று உணவுக் கட்டுப்பாடு. இரண்டு தேகப் பயிற்சி. உங்களுக்குத் தோட்ட வேலை விவசாய வேலை போன்று உடலுழைப்புடன் கூடிய பணியென்றால் அதுவே போதிய தேகப் பயிற்சி ஆகி விடும். இல்லையென்றால் தேகப் பயிற்சிக்கு என்று நேரம் ஒதுக்க வேண்டும். டென்னிஸ், கிரிக்கெட் என்று செலவு செய்து உடல் பயிற்சி பெறுகிறவர்கள் பெறட்டும். இதற்கெல்லாம் சக்தியோ வசதியோ இல்லாதவர்கள் ஆசனங்கள் போட்டுப் பழகலாம். செலவின்றி தேக ஆரோக்கியம் பெறலாம்.

அதிலும் சிறப்பாக தனுராசனம் பழகும் மனிதனிடம் டயபெடீஸ் விரோதி கிட்டத்தில் நெருங்கவே மாட்டான். டயபெடீஸ் ஆரம்ப நிலையில் இருந்தால் தனுராசனத்தால் அதனைப் பூரணமாக வெற்றி கொள்ளவும் முடியும். நாற்பது நாள் ஒழுங்காகத் தவறாமல் செய்து பார்த்து விட்டு சிறுநீரை அல்லது ரத்தத்தைப் பரிசோதனை செய்து பார்த்தால் தனுராசனத்தின் மகிமை தெரிய வரும். சர்க்கரை வியாதி என்று சந்தேகித்தால் அலட்சியம் செய்யாமல் தொடக்க காலத்திலேயே அதனை எதிர்த்து வெற்றி கொள்ளப் பார்க்க வேண்டும்.

தனுராசனம் செய்யும் போது பான்கிரியாஸ் தூண்டி விடப்பட்டு உற்சாகம் கொள்கிறது. அதனைச் சுற்றிச் செல்லும் ரத்த நாளங்களில் புது ரத்தம் புகுந்து பாய்வதால் பான்கிரியாஸ் புத்துணர்ச்சி பெறுகிறது. காப்பியோ டீயோ நரம்புகளைச் செயற்கையாகத் தூண்டி விடுவது போன்ற விஷயம் இல்லை இது. இயற்கையான விதத்தில் நடக்கும் ஊக்குவிப்பு. நாற்பது நாட்களில் நல்ல பலன் கிடைக்கும். அப்புறம் 'பழைய குருடி கதவைத் திறடி' என்று ஆரம்பித்து விடக் கூடாது. ஆகார விஷயத்தில் இந்த வியாதிக்கு உரிய நியமங்களைத் தொடர்ந்து கடைப்பிடிக்க வேண்டும். விடாமல் யோகாசனம் செய்ய வேண்டும். தனுராசனத்தோடு மற்ற ஆசனங்களிலும் படிப்படியாக முன்னேறி, செய்து வந்தால் ஒன்றுக்கொன்று அனுசரணையாக விளங்கி உடம்பை ஆரோக்கியமாக வைத்திருக்கும்.

மருந்து என வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்

என்று கூறியிருக்கிறார் திருவள்ளுவர். நாம் அன்றாடம் சாப்பிடும் உணவை கவனித்துச் சாப்பிட்டால் மருந்து — மாயம், ஊசி போன்ற எதுவும் வேண்டியதில்லை. வியாதி வந்து கஷ்டப்பட வேண்டியதில்லை.

முருங்கைக் கீரை டயபெடீஸ் வியாதிக்கு மிக நல்ல ஔஷதம். சர்க்கரை மாற்றும் திறன் இதற்கு நிறைய இருக்கிறது. டயபெடீஸ் உள்ளவர்கள் தினமும் முருங்கைக் கீரையை உணவில் சேர்த்துக் கொள்வது அவசியம். மற்றவர்கள் வாரம் ஒரு முறையேனும் சேர்க்கலாம். எல்லோருமே தினமும் ஏதாவது ஒரு வகைக் கீரை சாப்பிடுவது நல்லது. முருங்கைக் கீரையைப் பருப்புப் போட்டுக் கூட்டு செய்யலாம்; சாம்பார் செய்யலாம். பருப்புடன் மசியல் பண்ணலாம். வெங்காயம், உப்புப் போட்டு இலேசாக வதக்கியும் சாப்பிடலாம். பருப்பும் தேங்காயும் கூடச் சேர்த்தால் ருசி அள்ளிக் கொண்டு போகும்.

இன்சுலின் ஊசியும் மருந்தும் மாத்திரையும் சோம்பியிருக்கும் பான்கிரியாஸை, 'நீ சோம்பியே இரு; நாங்கள் உன் வேலையைக் கவனித்துக் கொள்கிறோம்' என்கின்றன. சமயத்தில் காலை வாரி விட்டாலும் விட்டு விடும். யோகாசனமோ சோம்பியுள்ள பான்கிரியாஸைத் தூண்டி விட்டு உற்சாகப்படுத்தி வேலை வாங்குகிறது. எது நல்லது? நீங்களே தீர்மானிக்கலாமே!

(தொடரும்)

## 94 வயதான அந்த நாள் தியாகி!

"மூச்சந்திகளில் குடையைக் கவிழ்த்து வைத்து, 'இதோ பார் கீரி — பாம்பு சண்டை' என்று கூட்டம் கூட்டுவோம். ஆட்கள் கூடியதும் காங்கிரஸ் பிரசாரத் துண்டுப் பிரசுரங்களை வீசி விட்டு ஓடி விடுவோம். சேத்துப்பட்டுப் பகுதியில் பச்சையப்பன் கல்லூரி விடுதி அருகில் பூவரச மரத்தின் மேலே ஏறி நின்று கொண்டு உரத்த குரலில் லெக்சர் கொடுப்போம். ஒரு பர்லாங் தூரம் கேட்கும். அப்ப எல்லாம் மேடை போட்டுப் பேச எவன் விட்டான்?"

தொண்ணூற்று நான்கு வயதில், இளமைத் துடிப்பு நினைவுகளோடு சுதந்திரப் போராட்ட காலத்து உணர்வுகளில் திளைத்திருப்பவர் நாகைப்பட்டினத்தி


காங்கிரஸ் நூற்றாண்டு விழாவில் பாரதப் பிரதமர் ராஜீவ் காந்தியிடம் கேடயம் பெறும் நாயுடு.

# காவல் துறையைக் கதிகலங்க அடித்தவர்!

லுள்ள தியாகி கே. லெட்சுமண நாயுடு.

அண்மையில், இவருக்கும் இவருடைய துணைவியார் குப்பம்மாளுக்கும் நாகைப் பட்டினத்தில், முன்னாள் தலைமை நீதிபதி மு. மு. இஸ்மாயில் அவர்கள் தலைமையில் 'சுவர்ணாபிஷேக விழா' நடைபெற்றது. நாயுடுவின் மனைவி குப்பம்மாள், வேதாரண்யம் உப்பு சத்யாக்கிரகத்தில், போலீஸ் தடியடியில் இடுப்பு எலும்பு பாதிக்கப்பட்டு, இன்னும் இயல்பான நடை மீளாமல், சிரமப்படுகிறார். ஆனாலும், சுதந்திரப் போராட்ட வீரர் என்கிற பெருமிதம் அவர் புன்னகையில் வெளிப் படுகிறது.

எட்டாம் வகுப்புக்கு மேல் படிக்க முடியாமல், வெள்ளைக்கார நிர்வாக ரயில்வே ஒர்க் ஷாப்பில் வேலைக்குப் போனார் நாயுடு. அன்றைக்கு நூறு ரூபாய் கூடச் சம்பளம் இல்லை. காங்கிரஸ் துடிப்பிலிருந்து இவரைத் திசை திருப்புவதற்காக ரெயினால்டு துரை இவருக்கு வேலை தந்தார். ஆனால் கிட்டத்தட்ட ஆறாயிரம் பேர் வேலை செய்த ரெயில்வே ஒர்க் ஷாப்பில் வேலை நிறுத்தம் என்று முடுக்கி விட்டு விட்டார் நாயுடு. கட்சியை விட்டு விட்டு, ஒழுங்காக வந்தால் 'ஃபோர்மேன்' வேலை தருகிறேன் என்று துரை ஆசை காட்டியும், ஆயிரம் ரூபாய்ச் சம்பளத்தை விடத் தேசமே பெரிது என்று தெருவில் நடந்தவர் லெட்சுமண நாயுடு.

இரண்டு மூன்று செக்ஷன்களில் நிர்வாகம் வழக்குப் போட்ட போது நாயுடு சார்பில் வழக்கறிஞர்கள் இலவசமாகவே வாதாடினார்களாம்.

* 1932ல் நாயுடுவுக்கு ஆங்கிலேய அரசு கொடுக்க எச்சரிக்கை அறிவிப்பு

**WARNING NOTICE.**

You *Lakshmana Naidu Negapatam* are hereby warned that the *Negapatam Taluk Congress* Committee of which you are (or were) *a member* has been declared an unlawful associat on and that anything said or done by you in furtherance of the aims of the association will be at once followed by arrest and prosecution.

Dist. Magistrate's Office, Tanjore.
Dated 12 . 1932.

W. SCOTT [illegible]
DISTRICT MAGISTRATE, TANJORE.

The Lawley Press, Tanjore.

தடை யுத்தரவை மீறி நாகைப்பட்டினத்தில் கூட்டம் நடத்திய போது, மாவட்ட நீதிபதி, தாமே வந்து எச்சரிக்கை அறிவிப்பைத் தந்தார். ஐந்து நிமிடத்தில் இடத்தைக் காலி செய்யா விட்டால் சுடப் போகிறார்கள் என்கிற நிலை. சட்டென்று பின்வாங்கி, தேசிய உயர்நிலைப் பள்ளி எதிரேயுள்ள குமரன் கோவில் பக்கமாய் ஓடி, வண்டி, லாரி என்று பயணப்பட்டுத் திண்டிவனம் வந்து சேர்ந்தார் நாயுடு.

'நாயுடுவின் தலையைக் கொண்டு வந்தால் பத்தாயிரம் ரூபாய் தருகிறோம்' என்று அறிவிக்கும் அளவுக்குக் காவல் துறையைக் கதிகலங்க அடித்தவர் நாயுடு.

திண்டிவனத்திலிருந்து ஆறாவது மைலில் பெருமுக்கல் மலை மீது போய்த் தலை மறைவானார். ஏற்கெனவே சுத்தானந்த பாரதி அங்கு மறைந்திருந்ததுண்டு. ஒரு வாரம் அங்கே வாழ்க்கை. ஓமாந்தூர் ரெட்டியார் ஏற்பாட்டில் சாப்பாடு வரும். தகர டின்னில் வைத்து அனுப்புவார்கள். மலை மேலே இருந்து கறுப்புக் கயிற்றில் அதை மேலே இழுத்துக் கொள்வார் நாயுடு. ஒரு நாள் டின்னில் சாப்பாட்டோடு ஒரு கடிதமும் வந்தது.

''போலீஸ் கண்டுபிடித்து விட்டது. கடப் போகிறார்கள்.''

மலைக்குப் பின்புறம் நம்மக்கல் என்று ஒரு கிராமம். அது வழியாகத் தப்பிப் புதுச்சேரிக்கு வந்தார் நாயுடு. ஆடு மேய்க்கிறவன் மாதிரி தலையில் முண்டாசு, தோளில் குடை, அதில் செருப்பு – என்று நடந்து பாவேந்தர் வீட்டுக்கு வந்தார்.

''எனக்குத் தெரியும் நாயுடு! எப்படியெல்லாம் அவதிப்பட்டிருப்பீங்கன்னு. உங்களை மாதிரி ஜில்லாவுக்கு இரண்டு மூணு பேர் இருந்தாப் போதும்'' என்று சொன்ன பாவேந்தர், அன்றிரவு வீட்டில் தங்க வைத்து விட்டு, பாரதி தங்கியிருந்த ரெங்கப்பிள்ளை தெரு – முத்துமாரியம்மன் கோவில் முனை வீட்டுக்கு அனுப்பி வைத்தார்.

**ஜ**ஸ்டிஸ் கட்சியின் கோட்டையாக இருந்தது தஞ்சாவூர் மாவட்டம். நாயுடு போன்றவர்களின் கடுமையான உழைப்பு அங்கே காங்கிரசின் செல்வாக்கைப் பெருக்கியது. காந்திஜி, ராஜாஜி, வல்லபாய் படேல், நேருஜி போன்ற பெருந்தலைவர்களை நாகைப்பட்டினத்துக்கு வரவழைத்தவர் நாயுடு.

நகரசுத்தித் தொழிலாளர் சங்கத் தலைவர் என்ற முறையில், அவர்களிடம் நாலு வார்த்தை பேச வேண்டும் என்று நாயுடு, காந்திஜியை அழைத்த போது, உடனிருந்தவர்கள் முகம் சுளித்துத் தடுக்கப் பார்த்தார்கள். ஆனால் பாபுஜி ''அச்சா! ஆயியே!'' என்று புறப்பட்டு வந்து விட்டார்.

நாயுடு தருமகோவில் தெருவில் குடியிருந்த போது, காமராஜ், ஓ.பி.ஆர்., இராமசாமிப் படையாச்சி என்று அவர் வீட்டுக்கு வராத தலைவர்களே இல்லை. நாயுடு வீட்டில் வந்து தங்கித்தான் பக்தவத்சலம், இரகசிய அறிக்கைகளைத் தயாரித்து அனுப்புவாராம்.

**சு**தந்திரம் கிடைத்து ஏழெட்டு ஆண்டுகள் வரை, நாகைப்பட்டினத்தில் சுதந்திர தினக் கொண்டாட்டம் படு உற்சாகமாய் நடக்கும். அதில் லெட்சுமண நாயுடு மேற்பார்வையில் இருநூற்றுக்கும் மேற்பட்ட குதிரைகள் அணிவகுத்து வரும். நாயுடு, வண்டிக்காரர் சங்கத் தலைவராகவும் இருந்த காலம். (இருநூறு குதிரை வண்டிகள் ஓடிய நாகையில் இன்று மருந்துக்குக் கூட ஒரு வண்டி இல்லை. குதிரை வண்டிகள் இருந்த நிலையங்கள் இப்போது 'டாக்ஸி ஸ்டாண்ட்' ஆகி விட்டன.)

நாயுடு வீட்டிலேயே நான்கைந்து வண்டிகள், குதிரைகள் இருந்ததுண்டு. ஆட்கள் வைத்து ஓட்டி, அதில் கிடைக்கும் வருமானமே குடும்பத்தை ஓட்டியதாம்!

**நூ**றாவது ஆண்டை நெருங்குகிற நாயுடுவின் ஆசை, சுதந்திர பாரதத்தின் வளர்ச்சியைச் சுற்றிப் பார்த்து ஆசை தீர அனுபவிக்க வேண்டும் என்பது. உடல் தளர்ந்தாலும் மனம் தளராத நாயுடுவுக்கு ஒன்று சொல்ல வேண்டும் போல் தோன்றுகிறது. ''உங்கள் வீட்டுக்குள்ளிருந்தே சுதந்திர பாரதத்தைக் கற்பனையில் பார்த்துச் சந்தோஷப்படுங்கள். வீட்டுக்கு வெளியே வந்து சாராய தேவதைகள், வகுப்புத் துவேஷங்கள், வன்முறைகள் – எல்லாவற்றையும் பார்த்தால் உங்களால் தாங்கிக் கொள்ள முடியாது!''

— 'கலைசக்கிழார்'



அடுத்த இதழில்...

அத்வானி
சிறப்புப் பேட்டி

# கேரளப் பெண்கள்: கேளுங்கள் பெருமையை!

●● கல்வி அறிவுடைய பெண்கள் சத வீதம் மிக அதிகம் கொண்ட மாநிலம் கேரளம் என்பது தெரிந்ததே! பெண்கள் சம்பந்தமான இன்னும் பல 'முதல்' பெருமைகள் கேரளத்துக்கு உண்டு. முதல் பெண் ஐ. ஏ. எஸ். அதிகாரி (திருமதி அன்னா ஜார்ஜ் மல்ஹோத்ரா), முதல் பெண் தலைமைப் பொறியாளர் (திருமதி பி. கே. தெரிசா), முதல் பெண் சர்ஜன் ஜெனரல் (திருமதி பூனென் லூகோஸ்) முதல் பெண் முன்சீஃப், முதல் பெண் செஷன்ஸ் ஜட்ஜ், முதல் பெண் உயர்நீதிமன்ற நீதிபதி, என அனைத்துப் பதவிகளிலும் இருந்த பெருமை கொண்டவர் திருமதி அன்னா சாண்டி.

●● உலகின் மிக உயரமான சிகரம் எவரெஸ்ட். அது இந்தியாவில் இல்லை. பின் எங்கே உள்ளது? நேபாள — திபெத்திய எல்லைப் பகுதியில்தான். சரி, இந்தியாவில் உள்ள மிக உயரமான மலைச்சிகரம் எது? காட்வின் சிகரம். (8611மீ).

●● பங்களாதேஷ் நாட்டின் தேசிய கீதம் ''எனது தங்க வங்கமே! உன்னை நான் காதலிக்கிறேன்'' என்ற பாடல்தான். எழுதியவர் ரவீந்திரநாத் தாகூர்.

●● பிரதமர் வி. பி. சிங்கின் மகன் அஜேய் சிங் ரகசிய வங்கிக் கணக்கு வைத்திருப்பதாய்ப் புரளி கிளப்பி விட்டார்களே அந்த செயின்ட் கிட்ஸ் பற்றிய சில தகவல்கள்: கிழக்கு கரிபியன் கடலில் ஒரு குறுகிய ஜல சந்தி மூலம் பிரிக்கப்பட்ட தீவுகள் செயின்ட் கிறிஸ்டோபர் (கிட்ஸ்) — நேவிஸ் ஆகிய இரண்டும். இங்கிலாந்தின் ஆளுமையிலிருந்த இவை 83 — இல் சுதந்திரமடைந்தன. இங்கே பெரும்பான்மை கறுப்பு இன மக்கள் தான். பருத்தியும், கரும்பும் முக்கிய விளை பொருட்கள். சுமார் 270 ச. கி.மீ. பரப்புள்ள இத்தீவுகளின் ஜனத்தொகை நாற்பதாயிரம். தலைநகர் பாசடெரே.

●● சீனா குழந்தைகள் உற்பத்தியில் மட்டும் தான் உலகில் முதலிடம் வகிக்கிறது என்று நினைத்துக் கொண்டிருக்கிறவர்களுக்காக இந்தத் தகவல்: உலகிலேயே மிக அதிகமாய் சைக்கிள், ஃபிரிட்ஜ், வாஷிங் மெஷின், தையல் மெஷின், மின் விசிறி, குக்கர், இஸ்திரி பெட்டி, உப்பு, பென்சில், பேனா, டேன் செய்யப்பட்ட காளான் ஆகியவை உற்பத்தியாவது சீனாவில்தான்.

●● பிரபல நாவலாசிரியர் அகதாகிருஸ்டிக்கு இது நூற்றாண்டு. 76 — ஆம் ஆண்டு, மறைந்த இவர் எழுபத்தெட்டு கிரைம் நாவல்களும், பத்தொன்பது நாடகங்களும் எழுதியவர். இவரது நாடகங்களுள் விட்னஸ் ஃபார் தி பிராசிகியூஷன், தி மௌஸ் டிராப் இரண்டும் ரசிகர்களின் அமோக ஆதரவு பெற்றவை. மௌஸ் டிராப் தொடர்ந்து 15000 நாட்கள் நடந்து சாதனை படைத்தது. அகதா கிருஸ்டியின் சுயசரிதம். அவர் இறந்த பின் ஓராண்டு கழித்து வெளியானது.



எவரெஸ்ட்: இந்தியாவில் இல்லை.

●● உலகிலேயே மிக அதிகமான எண்ணிக்கையில் தொழிலாளர்களைக் கொண்ட நிறுவனம் இந்திய ரயில்வேதான். 16 லட்சத்துக்கும் அதிகம்.

●● நோபெல் பரிசைப் பெற்ற இந்தியர் மூன்று வகை: முதல் வகை, இந்தியாவில் பிறந்து, பிறகு அயல்நாட்டுக் குடியுரிமை பெற்றவர்கள். (உ-ம்) ஹரிகோபிந் குரானா, சுப்ரமணியம் சந்திரசேகர். வெளிநாட்டில் பிறந்து, இந்தியக் குடியுரிமை பெற்றவர் — அன்னை தெரசா. இந்தியாவில் பிறந்து, இந்தியராகவே இருந்தவர்கள் சி. வி. ராமன், தாகூர்.

**ஆதாரம்: மலையாள மனோரமா Year Book. வெள்ளிவிழாச் சிறப்பிதழ். விலை ரூ. 35/—**

தொகுப்பு: **மௌஷ்மி**

# கருணாநிதி எதில் ராஜதந்திரி?


* 'தூக்கி எறிவேன்

*** ஆற்காடு எழிலன், திருச்சி — 2.**

**? பெண்கள் எப்போது மௌனமாகிறார்கள்?**

! ஒரு ஜோக் சொல்லட்டுமா?
"ஆண் குழந்தை எப்போது பேச ஆரம்பிக்கும்?" என்று கேட்டார் ஒருவர்.
"பத்தாவது மாதத்தில்!"
"பெண் குழந்தைகள்?"
"லேட்டாக, பன்னிரண்டாவது மாதத்தில்... ஆனால் எப்போது நிறுத்துவார்கள் என்று தெரியாது!"

*** ஆர். நடராஜ கண்ணன், கும்பகோணம்.**

**? வெட்கத்தைவிட்டுக் க. நா. சு. கட்டுரை எழுத வாய்ப்புக் கேட்ட போது, பழம் பெருமை பேசும் எந்தப் பத்திரிகையும் வாய்ப்புத் தரவில்லை என்று கல்கியையும் சாடியுள்ளாரே, பராசக்தி?**

! குறிப்பிட்ட ஒரு காலகட்டத்தில் ஓர் எழுத்தாளரின் கோரிக்கையை ஏற்பதற்கும் ஏற்காமலிருப்பதற்கும் ஒரு பத்திரிகைக்குப் பல காரணங்கள் இருக்கும். காரணங்களை அறியாமல் சாடுவது முறையல்ல; நாகரிகமும் அல்ல. க. நா. சு., அமரர் கல்கியின் எழுத்தை மட்டமானது என்று விமர்சித்தவாறே வளர்ந்தவர்; ஆயினும் அமரர் கல்கியே அவர் கல்கியில் எழுத நிறைய வாய்ப்பளித்தார். அமரர் கல்கியின் காலத்துக்குப் பிறகும் கல்கியில் க. நா. சு. பக்கம் பக்கமாக எழுதியிருக்கிறார்.

*** கே. மகேஷ், சங்கராபுரம்.**

**? 'அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தினால் மகனே ஆனாலும் தூக்கி எறிவேன்' என்ற கலைஞரின் பேச்சு பற்றி...?**

! வரவேற்றுப் பாராட்ட வேண்டிய விஷயம்தான். அதே சமயம் அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தினால் கலைஞரேயானாலும் மக்கள் தூக்கி எறிவார்கள் என்பதையும் மறவாமல் இருந்தால் சரி.

*** கிஷோர், திருச்சி.**

**? 'பிராமணன் என்ற உணர்வே மனித குலத்துக்குச் செய்யும் துரோகம்' என்று கருதும் வீரமணிக்குத்தான் பிராமணர்களைப் பற்றிய உணர்வு அதிகம் போலிருக்கிறதே!**

! இந்த அலர்ஜி 'அவில்' மாத்திரை விழுங்கினாலும் அடங்காதது.

*** க. நடராஜன், சென்னை.**

**? எவரும் ஒரு தொகுதிக்கு மேல் போட்டியிடத் தடைவிதிக்கும் தேர்தல் சீர்திருத்த மசோதா தாக்கல் ஆகியிருப்பது பற்றித் தங்கள் கருத்து என்ன?**

! இந்த மசோதாவில் இதுபோன்ற பல நல்ல அம்சங்கள் உள்ளன. (பதவிக்கு வந்து ஐந்தாறு மாதங்களுக்குள் இத்தகைய சீர்திருத்த மசோதாக்கள் பலவற்றைத் தாக்கல் செய்துள்ள தேசிய முன்னணி அரசின் சுறுசுறுப்பு பாராட்டுக்குரியது.) தேர்தல் கமிஷனின்பார்வையாளருக்குஅதிகஅதிகாரங்கள் தரப்படும். தேர்தல் தினத்தன்று ஆயுதமேந்துதல் தடை செய்யப்படும். சில தேர்தல் சாவடிகளில் மட்டுமின்றித் தொகுதி முழுவதுமே மறு தேர்தல் நடத்தத் தேர்தல் கமிஷனுக்கு அதிகாரம் வழங்கப்படும். எந்த ஒரு வேட்பாளர் மரணம் அடைந்தாலும் அத்தொகுதித் தேர்தல் நிறுத்தி வைக்கப்படுகிறது, இப்போது. இனி, அங்கீகரிக்கப்பட்ட அரசியல் கட்சியைச் சேர்ந்த வேட்பாளர் மரணமடைந்தால் மட்டுமே தேர்தல் நிறுத்தி வைக்கப்படும்... இவ்வளவெல்லாம் சட்டபூர்வச் சீர்திருத்தங்களைச் செய்தாலும், பண பலத்

* 'தங்கப்பூட்டு!'



* துணிச்சல்தான்!



தையும் அதிகார பலத்தையும் பயன்படுத்துவதில்லையென்றுவேட்பாளர்கள் தாங்களாகவே முன்வந்து சிறந்த தார்மிக மரபுகளை உருவாக்கி முன்னோடிகளாக விளங்கினாலன்றி நமது ஜனநாயகம் சீரழிவிலிருந்து தப்பாது; உன்னத நிலைக்கு உயராது.

* **மா. அதிராம விஜயன், தஞ்சை.**

? **சில வாரங்களாகச் சித்ரமாலாவில் தமிழ்ப் பாடல்கள் இருட்டடிப்புச் செய்யப் படுகிறதே?**

! உரக்கச் சொல்லாதீர்கள், போராட்டத்தில் இறங்க ஒரு விஷயம் கிடைத்து விட்டது என்று யாராவது கிளம்பிவிடப் போகிறார்கள்!

* **வண்ணை கணேசன், சென்னை.**

? **எந்த மாதிரி பலம் சட்டென்று பலவீனமாகிறது?**

! கருவில் இருக்கும் குழந்தை ஒரு குறையுடன் பிறக்கப் போகிறது என்பதை நவீன உபகரணங்களைக் கொண்டு முன்கூட்டியே அறிந்து, தாயின் வயிற்றைத் திறந்து கருவிலிருக்கும் குழந்தைக்கு ஆபரேஷன் செய்து, மீண்டும் கருப்பையில் வைத்து, முழு வளர்ச்சி பெற அனுமதிக்கிற அளவில் விஞ்ஞான அற்புதங்கள் நிகழும் காலம் இது. இந்த விஞ்ஞான முன்னேற்றமே பலம். இது மெய்ஞ்ஞானம் பெறத் தடையாக விளங்கினால் அதுவே பலவீனமாகிறது.

* **எம். ஷாஜ்கான், கம்பம்.**

? **'தேசிய முன்னணி அரசு எனது வாய்க்குத் தங்கப்பூட்டுப் போட்டு விட்டது' என்று சிவாஜி கணேசன் கூறியிருப்பது பற்றி...?**

! செல்வம் பறிபோய்விடாதிருக்கப் பூட்டி வைப்பவர் உண்டு. நமது இல்லாமையும் இயலாமையும் வெளியே தெரிய வேண்டாம் என்று பூட்டிக் கொண்டு போவோரும் உண்டு.

* வாழ்த்துக்கு...



* ...உரியவர்கள்



## நீங்கள் கேட்டவை — தராசு

* **எஸ். கே. மூர்த்தி, கும்பகோணம்.**

? **கருணாநிதி எதில் ராஜதந்திரி என்கிறீர்கள்?**

! ஒரு வாதத்துக்குப் பதில் கூற முடியவில்லை என்றால் பிரச்னையைத் திசை திருப்பிக்கொண்டு போவதில் அவருக்குள்ள ராஜதந்திரத்தை அவர் சீடர்களும் பெற்றிருக்கிறார்கள். சமீபத்திய பராசக்தி பதில் இதனை நிரூபிக்கிறது. குங்குமத்தில் வந்துள்ள நல்ல விஷயங்கள் எல்லாம் கல்கி கண்களில் படவில்லையா? என்று பட்டியல் போடுகிறார்கள். குங்குமத்தில் நிறையவே நல்ல விஷயங்கள் இடம் பெறுகின்றன. யார் மறுக்கிறார்கள்? ஆனால் கல்கியின் சாதனைகளையா கலைஞர் எண்ணிப் பார்த்தார்? கல்கியின் ரசனைக் குறைவு என்பதாக அவர் கருதியவற்றைத்தானே பட்டியலிட்டார்? அதனால்தானே நாமும் அதற்குப் பதில் கூற நேர்ந்தது? எப்படியோ வியாபார நோக்கில் சில காரியங்கள் செய்யப்படுவதாகக் குங்குமம் ஒப்புக்கொண்ட நேர்மையைப் பாராட்டலாம். ஆனால் கலைஞருக்கும் குங்குமத்துக்கும் சம்பந்தமே இல்லை என்று உணர்த்த முற்பட்டிருப்பதுதான் சிரிப்பை மூட்டுகிறது.

* **இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.**

? **கருணாநிதி பிறந்த நாள் விழாவில் நாஞ்சில் மனோகரன் பேச்சு...?**

! ஸ்டாலினை வாரிசு அல்ல என்று கூற ஒரு துணிவு வேண்டும். அந்தத் துணிச்சலைப் பாராட்டலாம் என்றாலும் இந்தச் சந்தர்ப்பத்தில் அதைப் பேசி ஒரு தர்மசங்கடத்தை எல்லோருக்கும் ஏற்படுத்தி இருக்க வேண்டாம்.

* **லீலா இராம், தக்கலை.**

? **யாரை யாரால் வெல்ல முடியாது?**

! ருஷ்யாவை அமெரிக்காவாலும், அமெரிக்காவை ருஷ்யாவாலும் வெல்ல முடியாது. இந்த அணு ஆயுத யுகத்தில் அனைவருமே நாசமாக வேண்டியதுதான். இதைப் புரிந்து கொண்டு, உச்ச மாநாட்டில் டென்ஷனைக் குறைக்கவும், ஒத்துழைப்பை அதிகரிக்கவும் வழிகண்ட புஷ், கோர்பசேவ், வாழ்த்துக்குரியவர்கள்.

* **ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**கு. நடராஜன்,**
**68, ராமானுஜ கூடம் தெரு,**
**பூவிருந்தவல்லி,**
**சென்னை — 600 056.**



''சொன்னாக் கேளுங்க சார். எங்க வீட்டுக்கு டெலிபோன் கனெக்ஷனே கிடையாது!''

''எதுவாயிருந்தாலும் வந்த பில்லுக்குப் பணத்தைக் கட்டிட்டு அப்புறம் 'க்ளெய்ம்' பண்ணி 'ரீஃபண்ட்' வாங்கிக்குங்க!''

— ஞா. ஞானமுத்து.

நர்ஸ்: டாக்டர்கிட்டச் சந்தேகம்னு எதுவும் கேட்டுடாதீங்க!

வந்தவர்: ஏன்...? அதுக்குத் தனியா ஃபீஸ் கேட்பாரா?

நர்ஸ்: ஊஹூம், சந்தேகம்னு யாராவது கேட்டால் குழம்பிடுவார்!

— வி. ரேவதி.





''போஸ்ட்மேன் ஏதோ பணம் கொடுத்துட்டுப் போறாரே! ஏதாவது மணியார்டர் வந்துதா?''

''ஊஹூம்! பிரசுரமாகாம திரும்பி வந்த கதைகளைத் தூக்கிட்டு வர முடியலையாம்! வரும்வழியில் பழையபேப்பர் கடையில் போட்டுட்டாராம்!''

— வேதபுரி எஸ். இரமேஷ்.

''ஏன் சார், நீங்க ஆரம்பிச்சிருக்கிற மிக்ஸி, கிரைண்டர் கம்பெனிகளுக்கு எழுத்தாளர் பூபதியோட பேர் வச்சு இருக்கீங்களே, ஏன்?''

''அவர்தான் அரைச்ச மாவையே அரைக்கிறவர்.''

— எஸ். பரமகுரு.





''அந்தப் போலீஸ்காரர் டீ.வி. ரசிகரா இருப்பார் போலிருக்கு!''

''எப்படிச் சொல்றே?''

''நேற்று நான் சைக்கிளில் 'பெல்' லும் 'லைட்' டும்இல்லாமல்வந்தப்ப, 'சைக்கிளில் ஏன் 'ஒலியும் ஒளியும்' இல்லாமல் வர்றே' ன்னு கேட்டார்!''

— ஞா. ஞானமுத்து.

# சொன்னது சொன்னபடி!

●● என்னுடைய சகாக்களே எனக்கு ஒரு நெருக்கடியைத் தோற்றுவித்துக் கொண்டிருக்கிறார்கள் என்றால் அது நல்லதுதான். ஒவ்வொரு அரசும், ஒவ்வொரு பிரதமரும் இப்படிப்பட்ட நெருக்கடிக்கு ஆளாவது நல்லதுதான். அப்போதுதான் செயல்பாட்டில் மெத்தனம் தோன்றாமலிருக்கும்.

— வி.பி. சிங்.

●● சில அரசியல் பிரச்னைகளில் கருத்து வேறுபாடு இருந்தாலும், பிரதமர் வி.பி.சிங்குடன் எனக்குச் 'சுவையான உறவுகள்' இருந்து வருகின்றன.

— ஜனதா தளத் தலைவர் சந்திரசேகர்

●● மாநிலக் கட்சிகளால் மட்டுமே, அந்தந்தப் பிரதேச மக்களின் விருப்பங்களை நிறைவேற்ற இயலும். அந்தப் பணியைத் தமிழகத்தில் தி. மு. கழகமும், அஸ்ஸாமில் அசாம் கண பரிஷத் கட்சியும் செயல்படுத்தி வருகின்றன.

— முதலமைச்சர் மகந்தா

●● காங்கிரசாரைப் பழி தீர்க்க வேண்டும் என்ற எண்ணத்துடன் பிரதமர் அலுவலகம் செயல்படுகிறது. இ. காங்கிரசார் மீது குற்றப்பத்திரிகை தாக்கல் செய்வதிலும், திடீர் சோதனைகள் நடத்துவதிலும் தற்போதைய பழிவாங்கும் அரசைப் போன்று நான் எப்போதும் பார்த்ததில்லை.

— ராஜீவ் காந்தி

●● வி.பி. சிங் நீக்கப்பட்டால் வானம் இடிந்து விழுந்து விடாது. தேசிய அரசு உருவாக நான் நீக்கப்பட வேண்டும் என்றால் அதனால் தேசிய அரசில் எனக்கு நம்பிக்கை குறைந்து விடாது. நான் நீக்கப்படுவதால் நாட்டில் ஒருமித்த சிந்தனை ஏற்படுமென்றால் நான் அதற்குத் தயாராக இருக்கிறேன்.

— வி.பி. சிங்

●● தில்லியில் உள்ள மிருகக் காட்சி சாலையைத் தவிர்த்து, இந்தியாவில் மீதமுள்ள சுற்றுச் சூழல் இலாகா பிரச்னைகள் அனைத்தையுமே, தாமே தீர்த்துவிட முடியும் என்று நீலமணி ரௌத்ரே நினைத்தால் அதை நான் வரவேற்கிறேன். அதற்காக நான் ராஜினாமா செய்யப் போவதில்லை.

— அமைச்சர் மேனகா காந்தி

●● தென்னக ரயில்வேயில் விபத்துக்கள் அதிகமாக இருக்கிறதே என்கிறார்கள். மற்ற இடங்களுடன் ஒப்பிடும் போது இங்கேதான் மிகவும் குறைவு.

— தென்னக ரயில்வே ஜெனரல் மானேஜர், நரசிம்மன்.

●● 'ஹைதராபாத் — பம்பாய் விடுமுறை ஸ்பெஷல் ரயில் விபத்தால் பாதிக்கப்பட்ட பயணிகளும், இதன் தொடர்பாக ரத்தான ரயில்கள் காரணமாக பாதிக்கப்பட்ட பயணிகளும் பஸ்ஸில் பயணம் செய்ய பஸ் பந்த் இடையூறாக இருந்தது' என்று கூறுவது தவறு. இந்தக் கூற்றை நான் மறுக்கிறேன்.

— என். டி. ஆர்.

●● வீடியோ துறை விஞ்ஞான முன்னேற்றங்கள் பற்றி மக்களுக்குத் தெரிவிப்பதைத் தன் கடமையாகக் கொள்ள வேண்டும். செக்ஸ், வன்முறை, சென்ஸேஷன் இவற்றுக்கே முக்கியத்துவம் தந்து கொண்டிருக்கக் கூடாது.

— மு. கருணாநிதி

●● தமிழ் நாட்டில் பிரிவினை இயக்கம் கொஞ்சம் கொஞ்சமாகப் பரவி வருகிறது. இது புற்று நோய் போன்றது. ஆரம்பத்திலேயே கவனித்து சிகிச்சை அளிக்கவில்லையென்றால் குணப்படுத்த முடியாது.

— குமரி அனந்தன்

●● பிரிவினை மனப்பான்மைக்குத் தி.மு.க. மௌனம் சாதித்து நடவடிக்கை எடுக்காததன் மூலமே ஊக்குமளித்து வருகிறது. இந்த மனப்பான்மை முளையிலேயே கிள்ளி எறியப்படவில்லையென்றால் தமிழ்நாடு இன்னொரு பஞ்சாப் அல்லது காஷ்மீர் ஆகிவிடும்.

— சுப்பிரமணிய சுவாமி

●● காஷ்மீர் — பஞ்சாப் பிரச்னைகளுக்கு ராஜீவ் அரசுதான் காரணம் என்று தொடர்ந்து கூறிக் கொண்டிருக்க நான் விரும்பவில்லை.

— வி.பி. சிங்

●● தமிழகத்தின் குடிநீர்ப் பிரச்னைக்கு முந்தைய ஆட்சியே காரணம்.

— முரசொலி மாறன்





# மருது பாண்டி

ஜமீன் காலத்துக் கதையாய் இருந்தாலும் ஒருவித மர்மப் பூச்சோடு சிக்கென்ற திரைக்கதை அமைப்பில் விறுவிறுப்பூட்டியிருக்கிறார்கள்.

மருதுபாண்டி ராம்கி. படம் முழுக்கப் பாறை முகம்தான். அந்தக் கறுப்பு பின்னி போர்வையும் கைத்தடியும் நெற்றியில் நீட்டுத் திலகமும் கொடுவாள் மீசையும் 'ஒரு பிள்ளை எதிர்நிற்க முடியுமா என்ற அச்ச உணர்வை ஏற்படுத்துகிறது. அந்தப் பாறை முகம் நெகிழ்ச்சி காட்டும் சந்தர்ப்பங்களும் உண்டு. ஊர்ப் பெண் அடுத்த ஊர்ப் பையனுடன் ஆறு தாண்டிப் போய் அக்கரைக் கோவிலில் தாலி கட்டிக் கொள்ளத் தயாராகும்போது மடக்கி இழுத்து வந்து கல்யாண வீட்டில் தன்னும் கடமை உணர்வு என்ன, நிச்சயித்த பையன் தாலி கட்டும்போது குறுக்கிட்டு. 'கல்யாணம் நடக்கும். ஆனால் மாப்பிள்ளை அடுத்த ஊர்ப் பையன்தான். அவங்க காதலைப் பாழாக்காதீங்க,' என்று நெகிழ்வது என்ன — மனசில் வடு பதிக்கும் நிகழ்ச்சி.

சீதா விச்விச்சென்று வெடித்து ஒட்டுறவு காட்டும் போது வார்த்தைகளே தட்டுக்கெட்டுப் போனாலும் அந்தக் குறுகுறு பார்வையும் சரசமும் கொள்ளை தான். 'ஐயோ பாவம் அனாதை' என்று சொல்லிக் கொண்டு ஊர்ப் பெரிய மனிதர்கள் எல்லாம் ஆகாரப் பண்டங்களிலிருந்து அம்மிக்குழவி வரை கொண்டு வந்து தள்ள, 'நான் அத்தனையும் வாங்கிக்கறேன். உங்க பொண்டாட்டிகளைக் கொண்டு வந்து கொடுக்கச் சொல்லுங்க,' என்று ஒரு போடு போட, அத்தனை பேரும் காணாமல் போகக் கண்டு கைகொட்டிச் சிரிப்பது ரசிக்கும் படியிருக்கிறது.

கொஞ்சம் போல நிரோஷா — வந்த கவடு அழுந்துமுன் ஆழமான காதலை அள்ளித் தந்து அஸ்தமனமாகிப் போகிறார்.

பக்கா வில்லனாய் நாசர். அதிகபட்ச வெறுப்பை வாரிக் கட்டிக் கொள்கிறார்.

சந்திரனின் தான்தோன்றித்தன ஹாஸ்ய வதையிலிருந்து என்றைக்கு விடுதலை என்று ஏங்க வைத்திருக்கிறார்கள்.

போலீஸ் உடையில் பட்டவர்த்தனமாய் அட்டகாசம் செய்கிறாரே நாசர், அதனால் டிபார்ட்மெண்ட் பொல்லாப்பு வந்து சேருமோ என்று அஞ்சிய மாதிரி ஓர் இடைச் செருகல்: மேலிடத்துக் கமிஷனர் அலுவலகத்தில், 'அந்த ஆள் பழைய சொந்த விரோதத்தை மனசில் வைத்துக் கொண்டு ஊரையே துவம்சம் பண்ணிக் கொண்டிருக்கிறானாம். முதலில் அவனை அரெஸ்ட் பண்ணிக் கொண்டு வாருங்கள்,' என்று மேலதிகாரி உத்தரவிடுவதாய் ஒரு காட்சி. படத்தில் கடைசிவரை அப்படி அரெஸ்ட் செய்ய எவரும் முனையவில்லை. வெறும் கண்துடைப்பு.

காமெரா துல்லியம். காட்டு வளம் படுவாகு.

சண்டைக் காட்சிகள் அதிகம்தான் என்றாலும் அது இல்லாமல் கதை இல்லை.

புதுக புதுசாய் மானாவாரி நிகழ்ச்சிகள். நிறைவு தருகிறது.

— பி. எஸ். எஸ்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: டெ. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

